


ஜூன் 1991

# ஸப்தகிரி

விலை ரூ. 1/-

22

సప్తగిరి

SAPTHAGIRI

ಸಪ್ತಗಿರಿ

ஸப்தகிரி

सप्तगिरि




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக
ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு; அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்
அவன் நம்மை அளித்துக் காப்பான்

—கம்பராமாயணம்

ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான காற்றுத்தேவன் மைந்தன்; அவ்வைந்திலே ஒன்றான (கடல்)நீரினைக் கடந்தவன்; அவ்வைந்திலே ஒன்றான விண்வழியாகத் தாவியவன்; அவ்வாறு தாவி அயலார் ஊரான இலங்கை சென்றவன்; அங்கு சீதையின் ஆருயிரைக் காக்கச் சென்றவன்; அங்கு ஐந்திலே ஒன்றான பூமி பெற்றெடுத்த சீதையைக் கண்டவன்; பிறகு இலங்கையின் மீது ஐந்திலே ஒன்றான தீயை வைத்தவன்; இத்தகு வலிமை கொண்டவன்-அநுமன்- நம்மையும் காத்தருள்வானாகுக.

# ஸப்தகிரி






ஜூன்-1991

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 | இதழ் 1


## உள்ளுறை

பக்கம்


| | |
|---|---|
| பலலாணடு கூறுதுமே | .. 4 |
| மனம போல் வாழவு | .. 7 |
| பகவானுக்கு ஏற்பட்ட பேராபததுக்கள் மூனறு | .. 9 |
| சிலம்பில் திருமால வழிபாடு | .. 13 |
| பெணமையால உலகின நனமை | .. 17 |
| கோபம் | .. 21 |
| இரணடு கனகள் | .. 23 |
| ஆராதனை என அறியாமை ஒனறுமே | .. 27 |
| திருமாலின உறங்கும நிலை | .. 31 |
| ஆசாரயன . சீடன | .. 34 |
| மாறபபிரானைத் தொழுத மதுரகவியாழ்வார | .. 37 |


### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை — 'ஸபதகிரி'யின வயது இருபததிரண்டு -கே ஜெகதீஷ

2-வது பக்கம் — மறைந்த முனனாள் பாரதபபிரதமர திரு. ராஜீவ் காந்தி அவர்கள் திருமலைக்கு வருகை தநதபோது

3-வது பக்கம் — ஸ்ரீபதமாவதி தாயார கோயில் திருக்குளம், திருசசானூர்

பின்னட்டை — ஸ்ரீ ஆஞசநேயர் – கே. ஜெகதீஷ


சிறப்பாசிரியர் :
திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.,
செயலாடசிததலைவர,
திதிதேவஸ்தானம,
திருபபதி

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி
மேலாளர,
திதிதேவஸதான அச்சகம்,
திருப்பதி

ஆசிரியர்:
திரு.கே சுப்பாராவ், எம் ஏ.,

துணையாசிரியர்:
திரு.என்.எஸ்.ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati

# உங்களுடன்...

தன்நாட்டையும், செல்வத்தையும் வாமனனுக்குத் தானமாகத் தான் கொடுத்திட்ட போது, அதனைத் தடுத்திட்ட சுக்ராச்சார்யார்க்கு பலிச்சக்ரவர்த்தி மன்னன் "எந்த மன்னனும் இம்மண்ணைவிட்டு சொர்க்கத்திற்குச் சென்றாலும், தன்னுடன் தன் நாட்டையோ, தான் ஈட்டிய பொருளையோ உடன் கொண்டு செல்வதில்லை" என்று வாழ்க்கையின் நிலையாமையைக்கூறி, வாய்மையின் பெருமையைக் கூறாமல் கூறினான். இதுபோன்று சத்தியத்திற்காகவும், தர்மத்திற்காகவும் தன் உடமைகளையும், ஏன் புகழையும் துறந்த புண்ணியசீலர்கள் அவதரித்த புனிதபூமி இப்பாரதம். பகை கொண்டு போரிட்டாலும் போர்க்களத்தில் போரிலக்கணம் வகுத்து தங்கள் வலிமையையும், வல்லமையையும் காட்டிய புரவலர்கள் பலர் உலாவிய உயர்ந்த மண் இப்பாரதபூமி. அன்பை விதைத்து, அமைதியை விளைவித்து, மனிதப் பிறவிப்பயனை அறுவடை செய்து பார்புகழும் வகையில் பெருமை சேர்த்த புத்தரும், ஜைன மகாவீரரும், பரமஹம்ஸரும் அவதரித்த புனித மண் இப்பாரத பூமி. வேத உபநிடதங்களையும், புராண இதிஹாஸங்களையும், இலக்கியங்களையும் படைத்து அவற்றில் வரும் காட்சிகள், பாத்திரங்கள் கொண்டு அறிவுரை கூறி வழிகாட்டிடும் சமுதாய நன்னெறி விளக்கமாகத் திகழ்ந்து பல தத்துவ மேதைகளைத் தோற்றுவித்த இந்து சமயம் மலர்ந்திட்ட ஞானபூமி இப்பாரதம்.

இப்பார்த மண்ணில்தான் நடமாடும் தெய்வங்களாக பல மகான்கள் இந்நூற்றாண்டிலேயே நம்முன்னேயே வாழ்ந்து போயினர். இவர்களில் நாட்டிற்காகப் பொதுவாழ்வில் பங்கேற்று தியாகம், அன்பு, நேர்மை,. கடமை, போன்றவற்றையே தங்களது உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்தவர்களில் மூத்தவராக காந்தி மகான் விளங்கினார். அத்தகு மகான், அவர் தாய்நாட்டிலேயே, அவரை வழிபடும் மக்கள் முன்னிலையிலேயே, நாட்டு நலனுக்காக இறைவனை வழிபட்ட இடத்திலேயே, அவர் பிறந்த இம்மண்ணில் பிறந்த ஒருவனின் துப்பாக்கிக்குப் பலியானார் என்ற செய்தி சுமார் 42 ஆண்டுகளுக்கு முன்னர் இம்மண்ணையே உலுக்கியது. அதற்கு அடுத்து சுமார் ஏழாண்டுகளுக்கு முன்னர் பாரதி கண்ட புதுமைப் பெண்ணிற்குப் புதுவடிவம் தந்திடும் வகையில் திறமை, எளிமை, வலிமை, கடமை ஆகியவற்றிற்குப் பெருமை தந்திடும் வகையில் உலக அளவில் உயர்ந்து, இந்திய மண்ணிற்குப் புகழ் சேர்த்த முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி, அவருடைய வீட்டிலேயே பெண் என்றும் பார்க்கப்படாமல் கடமை தவறிய காவலர்களின் சரமாரியான துப்பாக்கிக் குண்டுகளுக்குச் சரிந்து போனார் எனும் செய்தி இந்நாநிலத்தையே நடுங்க வைத்தது.

இப்போது அவர்தம் புதல்வரை, முன்னாள் பிரதமரை, வடக்கையும், தெற்கையும் இணைத்திடும் ஒரு நம்பிக்கை நட்சத்திரத்தினை, பொதுநலத்தொண்டு ஆற்றிட கனவுகள் கண்டு வந்த ஒரு இளைஞனை, ஒரு நல்ல தலைவனை குண்டு வைத்து சிதைத்திட்ட செய்தி மனித நேயத்தையே செயலிழக்கச் செய்துள்ளது.

அரசியலைக் கலக்காது, இட, இன மொழி கடந்து, திரு. ராஜீவ் அவர்களின் முடிவினை நாம் சற்றே சிந்தித்தால், அவர்தம் மரணம் மனித நம்பிக்கையினையே தகர்த்திடும் வகையில் விளங்கிடக்காணலாம். மக்களாட்சியில் வன்முறை வழி என்பது மனித சமுதாயத்தினை வீழ்த்திடும் வேர்ப்பூச்சியாக அமையும். கொள்கை முரண்பாடுகளுக்கும் கருத்து வேறுபாடுகளுக்கும் வன்முறை ஒன்றுதான் தீர்வாக அமையுமென்றால், மனிதனை ஒரு காட்டுமிராண்டி என்று கூறுவதில் தவறேதுமில்லை. தன் விருப்பப்படி பேசவும், சிந்திக்க-

(47-ம் பக்கம் பார்க்க)

# பல்லாண்டு கூறுதுமே!

செல்வி. நடாதூர் திருமகள்-புதுவை.



பெரியாழ்வார்

ஆராவமுதனை அரங்கத்து நாயகனை அருந் தமிழ்ப் பாவால் நயம்படப் பாடிய வர் பெரியாழ்வார்.

"பல்லாண்டு பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள்
மணிவண்ணா
உன்சேவடி செல்வி திருக்காப்பு"

என்று கோவினைக் காக்கக் குன்றெடுத்து ஆடிய கணணனை உள்ளம் நெகிழ்ந்து வாழ்த்துகிறுர் பட்டர்பிரான்.

கோவிந்தனிடம் அவர் விடுக்கும் கோரிக்கை என்ன?

"அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு"

கண்ணனை வாழ்த்துவதோடு நின்றுவிடவில்லை விஷ்ணுசித்தர். அவனுக்குச் சொந்தமான-மால்வண்ண மார்பில் உறையும் திருமகளையும், இட, வலத்திருக்கரங்களில் வீற்றிருக்கும் சுடராழி பாஞ்சஜன்யங்களையும் பல்லாண்டு பாடி மகிழ்கிறுர் அந்தப் பக்தர்.

"ஏ மானிடர்களே, இவ்வுலகின்கண் வாழ்வாங்கு வாழ நினைத்தீராகில் சிறந்ததும் உயர்ந்ததுமான ஸ்ரீவைஷ்ணவக் குழாத்தில் வந்து இணையுங்கள். கூழைக் கும்பிடு போடும் கீழ்மையுடையோர்க்கு ஈங்கு இடமில்லை. நாங்கள் எப்பேர்ப்பட்டவர்கள்?

'இராக்கதர் வாழ் இலங்கை
பாழாளாகப் படை
பொருதானுக்கு'த்

தொண்டுபுரியும் சேவார்த்திகள்' என்கிறுர் ஸ்ரீவில்லிப்புத்தூரார். அடடா; என்ன காம்பீர்யம், என்ன பெருமிதச் செருக்கு.

ஆடி அடங்கும் வாழ்க்கையில், தான் மட்டும் கடைத்தேறினால் போதும் என்று நினைக்கவில்லை அந்த மகான். மக்கள் குலம் அனைத்தும் அந்த மஹா விஷ்ணுவின் அருள் பெற்று உய்ய வேண்டும் என அவாவுகிறுர்.

'நாடும் நகரமும் நன்கறிய நமோ
நாராயணவென்று
பாடு மனமுடைப் பக்தருள்ளீர்
வந்து பல்லாண்டு கூறுமினே'

"இறைவன் நாமாவளியை உரத்துக் கூறுங்கள். இதில் வெட்கமென்ன? ஒலியுங்கள். நாநிலத்தின் செவிகளுக்கு அறிமுகப் படுத்துங்கள்' என்று ஆணையிடும் போதுதான் அவருள் எத்தனை நம்பிக்கை?

புல்லாகிப் பூண்டாய், புழுவாகிப் பலப்பல பிறவி எடுத்தோமே. ஏதேனும் ஒன்றிலாவது உய்வு கிடைத்ததா? இறுதியில் மானுடவடிவு நம்மை அடைந்துள்ளது. இப்பிறப்பிலாவது நாம் இறைப்பேறு பெற வேண்டாம்...? காலம் முழுவதும் மற்றவர்க்குத் தொண்டு செய்வதிலேயே கழிக்கிறோமேயன்றி பேரருளாளன் சேவையை ஒரு சிறிதும் நினைக்கின்றோமோ?'

'தொண்டக் குலத்திலுள்ளீர் வந்து
அடிதொழுது
ஆயிரம் நாமம் சொல்லி
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து
பல்லாண்டு பல
ஆயிரத்தாண்டு என்மினே'

என்று வழிகாட்டுகிறுர்.

'ஸ்ரீவைஷ்ணவக் குலம் இன்றே நேற்றே தோன்றிய

தல்ல. எந்தை, தந்தை, தந்தை தம் மூத்தப்பன் என்று ஏழ்படி காலம் தொடங்கி வந்து வழி வழி ஆட்செய்கின்றோம். அந்தி சந்தி நேரத்தில் அரி உருவெடுத்து அரக்கனை அழித்தவன் எம் தலைவன்' என எச்சரிக்கிறார் பெரியாழ்வார்.

அற்றது பற்றெனில்உற்றது வீடு

என்றும்,

பற்றற்று இரு மனமே'

என்றும் வேண்டுகின்றனர் ஞானிகள். ஆழ்வார் மட்டும் சளைத்தவரா என்ன?

'பந்தனை தீரப் பல்லாண்டு
பல்லாயிரத்
தாண்டென்று பாடுதுமே'

என மோட்சப் பாதை அருளுகின்றார்.

'ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத் திண்மையை அறிவீர்களா? அவர்கள் எத்தகு உள்ள உறுதி உடையவர்கள்... ஒவ்வொரு வைஷ்ணவனும் தன் இரு புஜங்களிலும் பழுக்கக் காய்ச்சிய இரும்பால் சங்கு, சக்ரச் சின்னங்கள் வரைந்து கொள்பவன். தீயிற் பொலிந்து புனிதப்பட்டு, வம்சா வம்சாமாக நாராயணனுக்கு ஆட்செய்கிறோம். எங்கள் மாயப் பொருபடைவாணன், அரக்கரின் ஆயிரந்தோளும் குருதிபொழியச் சுழற்றிய ஆழிவல்லான்' என்று உவகைச் சுவை நல்கும் சித்தரின் மனப் பாங்குதான் என்னே?

'எந்நாள் எம்பெருமான் உன்றனுக்கு
அடியோம் என்று எழுத்துப்-
பட்ட
அந்நாளே அடியோங்கள் அடிக்கு-
டில்
வீடுபெற்று உய்ந்தது காண்'

'பைந்நாகத்தலை பாய்ந்தவனே! வடமதுரை மாதவா! வைதேஹி பொருட்டு சிலை குனித்த வைகுந்தவாஸா! உன்னைப் பல்லாண்டு வாழ வாழ்த்தும் அடியேன்பால் பரிவு காட்டு' என்று வேண்டுகிறார்.

'அன்பர்களே, ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் சேர்ந்தால் வெறும் பகவத் தியானத்திலேயே வாழ்நாள் கழிந்து விடுமோ, வயிறார உணவு கிடைக்காதோ என அஞ்ச வேண்டாம்.'

நெய்யிடை நல்லதோர் சோறும்
நியதமும்
அத்தாணிச் சேவகமும்
கையடைக்காயும் கழுத்துக்குப்
பூணொடு
காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர்
சாந்தமும் தந்து'

உங்களைக் குளிரச் செய்வோம். எனவே அங்ஙனம் சிறந்த நிலை வழங்கும் பையுடைய நாகப் பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு பாட வாருங்கள்.

'சார்ங்கம் உதைத்த சாரங்கா! நீ உடுத்துக் களைந்த பீதாம்பர ஆடையை நாங்கள்



திருவேங்கடவன்-மோகினி அவதாரத்தில்

பொக்கிஷம் போல் மதிக்கிறோம். தொடுத்த துழாய் மாலையை உனக்குச் சூட்டி பின்னர் அதனைப் பக்திப் பரவஸத்துடன் நாங்கள் சூடுகின்றோம். பைந்நாக அணைப் பள்ளி கொண்டவனே! யாம் கூறும் பல்லாண்டினை ஏற்றுக்கொள்!'

என்று அவர் கோரிக்கையில் இருக்கும் உருக்கம்தான் எத்தகையது!

'பெருமாளே, உன்கீழ் சேவை செய்ய அனந்தகோடிப் பக்தர்கள் உண்டு. அக்குழாத்தினுள் ஒருவரான அடியேன் மீதும் உன் கடாட்சம் படுவதாகட்டும். ஏனெனில் உனக்கு நான் மிகவும் பழமையான அடியவன். காலங் காலமாய் சேவகம் செய்பவன்.'

'நல்வகையால் நமோநாராயணா
வென்று
நாமம் பல பரவிப்
பல்வகையாலும் பவித்ரனே!
உன்னைப்
பல்லாண்டு கூறுவனே!



பாருங்கள், ஆழ்வார்களுள் முதலானவரும் இறைவனுக்கே கன்யாதானம் செய்து பரமபதம் அடைந்தவருமான விஷ்ணுசித்தர், தம்மை எவ்வளவு தூரம் தாழ்த்திக் கொண்டு, இறையருள்யாசிக்கிறார்.

எனவே, 'அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' எனும் ஔவை வாக்கைக் கருத்திற்கொண்டு நாமும் வில்லிப்புத்தூராரின் வழிசென்று, விண்ணகரத்தமுதனை விண்டுரைப்போம்.

பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு எனும் ஒப்பற்ற திருப்பதிகங்களை வாயினால் பாடி, மனத்தினால் சிந்திப்பவர்களுக்கு 'என்னென்ன நன்மைகள் விளையும் என்பதை இறுதிப் பாடல் விளக்குகிறது.

'பல்லாண்டு என்று பவித்ரனைப்
பரமேஷ்டியை
சார்ங்கமென்னும்
வில்லாண்டான் தன்னை
வில்லிப்புத்தூர் விஷ்ணுசித்தன்
விரும்பிய சொல்
'நல்லாண்டென்று நவின்
றுரைப்பார் நமோ
நாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச்
சூழ்ந்திருந்து
ஏத்துவர் பல்லாண்டே'

என்று இதற்கான பலச்சுருதியு கூறுகின்றார் அம்மஹான்.

'பாண்டியன கொணடாடப
பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்கமெடுத்தூத-வேண்டிய
வேதங்களோதி விரைந்து
கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று'

பெரியார் திருவடிகளே சரணம்.

# மனம் போல வாழ்வு

திரு. ஜி.ரெங்கராஜு - திண்டுக்கல்.

மனிதனுடைய உடலில் முக்கிய பகுதியாக மனம் செயல்படுகிறது. இதை வாயுவினுடைய அம்சம் என்று கூறுவார்கள். வாயுவைப் போல் இது எப்பொழுதும் சலனம் அடைந்து கொண்டே இருக்கிறது. இருந்த இடத்தில் இருந்தபடியே பதினான்கு உலகங்களையும் சுற்றிவரும் ஆற்றல் இதற்கு உண்டு. இதை அடக்கி நம் வசப்படுத்தினால் பெருத இன்பமெல்லாம் பெறலாம் என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். மனிதன் எவ்வளவோ நல்லவனாக இருக்க பிரியப்பட்டாலும், அவனைச்சுற்றியுள்ள சூழ்நிலை, சில சமயங்களில் மாசுபடுத்தி விடுகிறது. மனமானது செம்மையானால் மந்திரம் ஜெபிக்கவேண்டாம் என்பது பெரியோர்கள் சொல்லும் கூற்று. ஆகவே பரிசுத்தமான மனம் படைத்தவர்களிடம் சக்தி பெருகி வருவதை நன்ருகக் காணலாம். நமது மனம் நமக்கு வசமாக வேண்டும். மனது அடங்கி விட்டால் வேறு எதுவும் தேவையில்லை. இரண்டு எதிரிகள் நம்மிடம் இருந்து கொண்டே நம்மை வீழ்த்தி வருகிறார்கள். ஒன்று கோபம்; மற்றொன்று ஆசை. ஆசையையும் கோபத்தையும் நம்மால் அடக்க முடியவில்லை. இவைகள் இரண்டுமே நம்மை மேல் நிலைக்குச் செல்ல முடியாமல் தடுத்து வருகின்றன. எந்தப் பொருளை எத்தனை அடைந்த போதிலும் போதும் என்ற மனத்திருப்தி ஏற்படுவதில்லை. 'கஷ்டத்தையும், சுகத்தையும் சமமாக பாவித்து மன அமைதியாக இருப்பவனே என் பக்தன்', என்பது கீதையில் பகவான் சொல்லிய செய்தி. கலங்கிய நீரின் அடியில் தேங்கிய மணல் தெரியாது. அது போல் அமைதியில்லாத மனதில் உறுதியான எண்ணங்கள் உதிக்காது.

வெள்ளத்(து) அனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத்(து) அனையது உயர்வு

(குறள்)

நல்ல நஞ்சை நிலத்திற்கு உரம் இடுவது போல, உள்ளத்தில் ஈகை, இரக்கம், அன்பு, வாய்மை, அடக்கம், உண்மை பேசுதல் போன்ற நற்காரியங்களில் நாம் ஈடுபட ஈடுபட ஓர் பண்பட்ட நிலம் போல உள்ளம் அமைந்து விடும். நமது உயர்வுக்கு மனம்தான் பெரிய அஸ்திவாரம். ஆகவே மனத் தூய்மை பெற புதிய சக்திகளை மனிதனிடத்தில் காணலாம். ஒரு பண்பட்ட நிலத்தில் எந்த விதையை விதைக்கிறோமோ, அந்த விதையின் தானியமே விளையும். மனது எந்த விஷயத்தில் ஈடுபட்டிருக்கிறதோ, அதைத் தொடர்ந்து இந்திரியங்கள் (புலன்கள்) ஊழியர்களைப் போல் வேலை செய்கின்றன. வெறும் இந்திரியங்களால் செய்யப்படும்செயல்கள் கர்மங்கள் ஆகமாட்டா. மனத்தால் ஏவப்பட்டதே கர்மங்கள் ஆகும். அடையப்படும் பலன்கள் மனத்தின் ஊக்கத்தையும் முயற்சியையும் அனுசரித்துதான் கிடைக்கும். ஆகையால் எல்லா சங்கல்பங்கள், கிரியைகள், கர்மாக்கள், பலன்கள் அனைத்தும் மனதை அனுசரித்தே நடைபெறுகின்றன. மனதால் ஒரு சிறு சாம்ராஜ்யத்தையே ஒருவன் உருவாக்கவும், அதை அழிக்கவும் முடியும். ஒரு நிமிஷத்தை நீண்ட காலமாகவும், நீண்டகாலத்தை ஒரு நிமிஷமாகவும் அனுபவிக்கும் சக்தி பெற்றது மனது. மனமானது சம்பந்தமில்லாத விஷயங்களில் ஈடுபடாமல், நம்முடைய கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும். மனத்தை மனத்தாலேயே அடக்கி விட வேண்டும். மனம் அலைய மனிதன் அலைவான்.

மனத்தைக் கட்டுப்படுத்திப் பரிசுத்தப்படுத்துவதே கடவுளுக்கு நாம் செய்யும் சேவை. அது வழிப்பாட்டிற்குத் துணை செய்யும். மனது தூயதாக்கும் நேரத்தில் அதைக் கொண்டு செயற்கரிய செயல்களைச் சாதிக்கலாம். நல்ல மனமே மனிதனுக்கு என்றும் துணைபுரியும் தோழனாக அமைகிறது. மனத்தெளிவு ஏற்பட்ட பின், மனிதனிடத்தில் காணப்படும் தவறுகள் குறையும். மனம் ஒருமைப்பாடு

அடைந்தால எண்ணிய எண் ணமெல்லாம் கைகூடும்.

வீட்டின் கூரை பழுதடைந்து அதில் ஓட்டை விரிசல்கள் ஏற் பட்டால் மழைநீர் சுலபமாக உள்ளே புகுவது போல், நல்ல நெறியில் பழகாத மனதில் ஆசைகள் நுழைந்து இடம் பெற்று விடுகிறது. மனக்கட் டுப்பாடு உடையவர்களையும் கவலை அதிகம் நெருங்கு வதில்லை. கவலைக்கு அஸ் திவாரம் இடுவது பொய். பொய் சொல்ல மாட்டேன் என்று கூறிய அரிச்சந்திரனு டைய பெயர் இன்றும் நமது நாட்டில் புகழ்ந்து பேசப்படு கிறது. நமது பேச்சு வார்த்தை களில் தேவையில்லாத பொய் யைக் கலக்காமல் கவனமாக இருக்க வேண்டும்.

மனம் ஓர் கண்ணுடி. கண்ணு டியில் அழுக்கு சேரந்து விட் டால், அதன் எதிரில் நின்ரு லும் நமது உருவம் கண்ணு டியில் தெரியாது.

தடுங்கோள் மனத்தை விடுங்கோள்
வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோள் இருந்தபடி யிருங்கோள்
எழுபாருமுய்யக் கொடுங்கோபச்
சூருடன் குன்றந் திறக்கத்
தொளைக்கவைவேல்
விடுங்கோ னருள் வந்து தானே
உமக்கு வெளிப்படுமே.

அருணகிரிநாதர் மனத்தின் தன்மையைப் பற்றி சிறப் பாக கந்தரலங்காரத்தில் கூறி யுள்ளார். மனதைப் பரிசுத் தப்படுத்தினால் வாழ்வு உயர் வாழ்வாக அமைகிறது. உள் ளம் என்பது சூக்குமமானது. அதன் விசித்திரமான போக்கு களை அறிவது எளிதல்ல. மனத் திலே சாதாரணமாக செயல்ப டுகிற பகுதியும் மறைந்து நிற் கின்ற ஒரு பகுதியும் இருக்கின் றன என்று உளவியல் நிபுணர் கள் கூறுகின்றனர். வெறுப்பு ணர்ச்சி, பகையுணர்ச்சி போன்ற தீய உணர்ச்சிகளுக்கு உள்ளத் தில் இடம் கொடுத்து விட் டால் அவை மேலும் வளர்ந்து நமது அழிவுக்கும், நம்மைச் சார்ந்தோர் அழிவிற்கும் கார ணமாகிவிடும்.

வாழ்வு என்பது பெரும்பா லும் ஒருவரின் மனத்தைப் பொறுத்தது. அந்த மனம் உடம்பிலுள்ள ஒரு கருவியா கச் செயல்படுகிறது. மனத்தை அலையும் போக்கில் கடி வாளம் இல்லாமல் விட்டு விட்டால் அது தீமைகளை வெகு சுலபமாகக் கொண்டு வந்து நெஞ்சில் நிரப்பிவி டுகிறது. அதன் பின் மன அமைதி குறைந்து, குழப்பங்க ளும், ஆத்திரமூட்டும் செயல்களி லும், வெறுப்புணர்ச்சி கோபதா பங்களும் கூடி மனதை புலன்க ளுக்கு அடிமைப்படுத்திவிடுகின் றன. இம்மாதிரி தீய செயல் கள் மனதில் இடம் பெறுவதற்கு அடிப்படையான காரணம், மன வலிமை இல்லாத குறையே என்பதை உணர்ந்து, அதைப் பெறுவதற்கு வேண்டிய பழக்க வழக்கங்களை வளர்த்துக்கொள் ளவேண்டும். மன வலிமையை பாடு பட்டால் பெற்று விடலாம். மனித உடம்பு கடவுள் நமக் குக் கொடுத்த ஓர் வீடு. இதை நல்ல வகையில் பாதுகாத்துக் கொள்வது நமது கடமையாகும் கற்களால் கட்டப்பட்ட கோயில் களைவிட மனிதனுடைய மனக் கோயில்களில் தங்குவதையே இறைவன் சிறப்பாகக் கருதுகி ருன்.

உடம்பினை முன்னம் இழுக்கென்று
இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுள் உத்தமன் கோயில்
கொண்டான் என்று
உடம்பினையான் இருந்து ஓம்புகின்றேனே
[திருமந்திரம்.]



ஸ்ரீசாரநாதர் கோயில் - திருச்சேறை.



# பகவானுக்கு ஏற்பட்ட பேராபத்துக்கள் மூன்று

உலகிலுள்ள ஜீவாத்மாக்கள் கடைத்தேறி இறைவனடி சேர வேண்டும் என்று நினைத்து, வேதங்களையும், ரிஷிகளையும் உண்டாக்கினான். அவைகளும் பயனளிக்கவில்லை. பின்பு தானே அவதரிபித்தும் பயனளிக்கவில்லை. பின்பு தன் அம்சபூதர்களான ஆழ்வார்களை அவதரிப்பித்து, அவர்கள் திருவாய் மலர்ந்த ப்ரபந்தத்தால் ஜீவர்கள் சடைத்தேறினார்கள்.

ஆழ்வார்கள் பகவானுடைய ஸ்வரூப, ரூப, குணங்களிலும், அவனுடைய அவதாரங்களிலும் ஆழங்கால்பட்டு அநுபவித்ததால் இவர்களை ஆழ்வார்கள் என்று அழைக்கிறார்கள். இப்படி பன்னிரு ஆழ்வார்கள் அவதரித்தார்கள். அவர்களில் மிகச் சிறந்தவர் பெரியாழ்வாராவர். இவர் யசோதையாகவே மாறி கிருஷ்ணனை வளர்த்த பெருமைகளைத் தன் திருமொழியில் காட்டியுள்ளதை நினைவுபடுத்தும் முகத்தால் ஆண்டாள் "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" என்றதால் பிள்ளைத் தமிழுக்கு வித்திட்ட வித்தகராவார். மேலும் பகவானுக்கு என்ன தீங்கு வருகிறதோ? என்று பயந்து பயந்து பல்லாண்டு பாடியதால், இவரைப் பொங்கும் பரிவாலே பெரியாழ்வார் என்று கூறி, வைணவர்கள் போற்றுகின்றனர். இவ்வாழ்வார் பகவானுக்கு மூன்று பேராபத்துக்கள் உண்டாய்விட்டதே என்று கலங்குகிறார்.

இவ்வுலகில் இறைவன் உண்டு என்ற தன்மைக்கும், அவன் எங்கும் நிறைந்திருக்கிறானா? இல்லையா? என்ற தன்மைக்கும், முதலில் பேராபத்து ஏற்பட்டது. அதன் பின்பு இறைவனின் சொத்தான லீலா விபூதியை பிறர் அபகரித்துக்கொள்ள அந்த சொத்தை இழந்து தவித்த இறைவனுக்கு இரண்டாவது பேராபத்து உண்டானது. 'ஆதிமூலமே' என்ற திருப்பெயருக்கு யார்? உரியவர்கள் என்ற விவாதம் ஏற்பட்டு, அந்த திருப்பெயருக்கு பேராபத்து உண்டாயிற்று. இதுவே மூன்றாவது பேராபத்தாகும் என்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார். அதைப்பற்றி கீழே காண்போம்.

முதலில் ஏற்பட்ட பேராபத்து :

பிரம்மாவின் குமாரன் மரீசி பிரஜாபதி ஆவார். அவர் குமாரர் காசிப முனிவர் ஆவார். இவருடைய மனைவியர்களில் ஒருத்தி 'திதி' என்பவளிடத்தில் இரணியன், இரணியாட்சன் என்ற இரு குமாரர்கள் பிறந்தனர்.

திரு, G. இலட்சுமணன், M.A., B.Ed.,
சேடப்பாளையம்.

ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீ வராகமாய் அவதரித்து இரணியாட்சனைக் கொன்றார். இவனுடைய தமயனான இரணியன் தேவர்களிடத்திலும், மும்மூர்த்திகளிடத்திலும் அனேக வரங்களைப் பெற்றான். அந்த வரத்தினால் அகங்காரங் கொண்டு, உலகத்தில் கடவுள் இல்லை, நானே கடவுள், என்னையே ஆராதிக்க வேண்டும் என்று பறைசாற்றி அவ்வாறே வாழ்ந்து வந்தான்.

சிலகாலம் சென்றபின் பிரகலாதன் என்ற ஞானபுத்திரன் அவதரித்தான். பின்பு அவன் தகப்பனாரின் பெயரைச் சொல்லாமல், ஸ்ரீமந்நாராயணனின் பெயரைச் சொன்னான். இவ்வாறு பல தடவைச் சொன்னதால் சீற்றங்கொண்ட இரணியன், பிரகலாதனைக்கொல்வதற்குப்பலவழிகளைச் செய்தான். அந்த ஹரியின் உதவியால் உயிர்பெற்று வருவதைக் கண்ட இரணியன் மிகவும் கோபத்துடன் தன் மகனைப் பார்த்து "நீ சொல்லும் 'ஹரி' எங்குள்ளான்" என்றான்.

அதற்கு பிரகலாதன், 'இறைவன் எல்லா உயிர்களிடத்திலும், உயிர் அற்றவைகளிடத்திலும், எள்ளில் எண்ணெய் போலும், பூவில் வாசனை போலும் மறைந்து வாழ்கிறான்' என்றான்.

"அந்த ஹரி, சாணிலுமிருக்கிறான், மிகச் சிறிய ஓர் அணுவை நூறு கூறாகப் பிரித்து அந்த ஒரு சிறு பகுதியிலும் இருக்கிறான். மகாமேரு மலையிலும் இருக்கிறான். உன் கண்ணுக்கு ப்ரதட்சமான இத்தூணிலும் இருக்கிறான். நீ சொன்ன சொற்களிலும் இருக்கிறான். இந்த உண்மைத் தன்மையை விரைவாக சோதித்து அறிவாய்" என்று மேலும் ஞான நாயகன் கூறினான்.

இப்படி சோதித்து அறிவாய் என்று பக்தன் சொல்லும்பொழுதே, இறைவன் எந்த நிலையில், எந்த இடத்தில், எந்த காலத்தில் எப்படி தோன்றுவது என்று தெரியாமல் உலக முழுவதும், எல்லா இடங்களிலும் இருக்க வேண்டிய பேராபத்தை ஞான நாயகன் உண்டாக்கிவிட்டான். இதுவே இறைவனுக்கு ஏற்பட்ட முதல் பேராபத்து ஆகும்.

இரணியன் அவ்வமயம் எதிரே நின்ற/தூணைத் தட்ட, தட்டிய கையை பிடித்தபடியே சிவந்த கண்களை உடைய மனித உருவத்தில் சிங்கத் தலையுடனும் திக்குக்களை விழித்துக்கொண்டு அண்டகோளத்தை கீறிக்கொண்டு சிரித்தது, செங்கண்சீயம். அப்பொழுது இரணியன், நரஸிம்மத்துடன் போர் செய்தான். முடிவில் அவனைப் பிடித்து மடியில் கிடத்தி, இவன் நெஞ்சால்

இறைவன் உண்டு என்று நினைத்திருக்கிறானா? என்று மார்பை தடவும் பொழுதே, இவன் இல்லையாகிவிட்டான். நரஸிம்மமான இறைவன் உண்டு என்ற பேராபத்தை நீக்கி நிலைநாட்டிவிட்டான்.

இப்படிபட்ட நரஸிம்மத்திற்கு என்ன தீங்கு வருமோ என்று பயந்து "அந்தியம் போதில் அரி உருவாகி அரியை அழித்தவனை பந்தனை திரப் பல்லாண்டு, பல்லாயிரத் தாண்டென்று பாடுதுமே" என்று அந்த திருவவதாரத்திற்கு ஒரு தீங்கும் வரக்கூடாது என்று பயந்து பயந்து பல்லாண்டு பாடுகிறார். மேலும்,

"அளந்திட்ட தூணை அவன் தட்ட
ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க
வுருவாய்
உளந் தொட் டிரணியன் ஒண் மார்
வகலம்
பிளந் திட்ட கைகளால் சப்பாணி,
பேய் முலை யுண்டானே! சப்பாணி"

(பெரியாழ்வார் திருமொழி—1-7-9) என்று அஸ்தானே பய சங்கைப் பண்ணி, கைக்கொட்டி விளையாடும் பருவத்தை அநுபவிக்கிறார்.

இரண்டாவதாக ஏற்பட்ட பேராபத்து :

இறைவனின் சொத்தான லீலா விபூதியை அசுரர்கள் கைக்கொண்டனர். அந்தச் சொத்துக்களை இழந்த இறைவன் அவற்றைத் தனது என்று சொல்லிக்கொண்டு, அதை தனக்கு உரிமை ஆக்கிக்கொள்ள வேண்டிய பேராபத்து உண்டாயிற்று. அதைப்பற்றி கீழே காண்போம்.

மகாபலி என்ற அசுர ராஜன் மூன்று உலகங்களையும் தன் வலிமையால் வென்று தனதாக்கிக்கொண்டான். அதன் பின்பு தேவலோகம் சென்று, தேவேந்திரன் அமரும் சிம்மாசனத்தில் அமரச்சென்றான். அப்பொழுது அங்கிருந்த ஸப்த ரிஷிகள் கூறினார்கள். "நீ இந்த சிம்மாசனத்தில் அமரவேண்டும் என்றால் அசுவமேத யாகம் செய்யவேண்டும். பூர்த்தி செய்தவர்களே இப்பதவிக்கு தகுதியுடையவர்கள் ஆவார்கள். அத்தகுதி உடையவர்களுக்குத்தான் ஸப்த ரிஷிகளாகிய நாங்கள் பல்லக்குத் தூக்குவோம். ஆகவே உம் போன்றவர்களுக்குத் தூக்கமாட்டோம்" என்று கூறினார்கள்.

இதை கேட்ட மகாபலி 'முறைப்படி யாகம் செய்து இந்திரப் பதவியை பெற்று நீங்களே எனக்குப் பல்லக்கு தூக்கும்படிச் செய்கிறேன்' என்று

# திருமுதுகுன்றம்

இத்திருத்தலம் இன்று விருத்தாசலம் என்று வழங்கி வருகின்றது. இங்குக் கோயில் கொண்டிருக்கும் ஈசன் திருநாமம் ஸ்ரீ பழமலை நாதர். ஸ்ரீ விருத்தகிரீஸ்வரர் என்னும் திருநாமமும் உண்டு. அன்னையின் திருநாமங்கள் ஸ்ரீ விருத்தாம்பிகை, ஸ்ரீ பாலாம்பிகை, ஸ்ரீ பெரிய நாயகியம்மை முதலியனவாம். புண்ணிய நதி மணிமுத்தாறு. புண்ணிய விருட்சம் வன்னி மரம்.

இத்தலத்தின் பெருமை காசியின் பெருமையினும் வீசம் அதிகம். மூவர் பாடல்களைக் கொண்டது. அருணகிரியார், குருநமச்சிவாயர், குமார தேவர், சிவப்பிரகாச முனிவர், இராமலிங்க அடிகளார், சொக்கலிங்க அடிகளார் முதலான சான்றோர்களால் பாடப்பெற்ற திருத்தலம். பூவுலகில் இங்குத் தோன்றிய மலையே முதல் மலை, மூத்த மலை எனவே இத்தலம் பழமலை எனவும், முதுகுன்றம் எனவும், விருத்தாசலம் எனவும் அழைக்கப்படுகிறது. மலை இன்று மறைந்துள்ளது.

விபசித்து முனிவரால் திருப்பணி கொண்ட கோயில். கண்டராதித்த சோழன் மனைவி செம்பியன் மாதேவி, இராஜராஜ சோழன், குலோத்துங்கச் சோழன், காடவராதித்தன், வையப்ப கிருஷ்ண நாயக்கர், முத்துகிருஷ்ணப்ப நாயக்கர் முதலானோர் இக்கோயிலுக்குத் திருப்பணிகள் புரிந்துள்ளார்கள்.

இத்தலத்தில் இறந்திடும் உயிர்களை உமையவள் தனது மடியில் வைத்துக் கொண்டு தன் புடவைத் தலைப்பால் விசிறி அவைகளின் கர்ம பந்தங்களை நீக்குகிறாள். சிவபெருமான பஞ்சாட்சர மந்திரம் உபதேசம் செய்து பிறவித் துன்பங்களைப் போக்குகிறார். இதன் காரணமாக இங்கு சிவகதி பெற்றவர்களின் எண்ணிக்கை உயர் ஓங்கி நிற்கின்றது.

'தம்பிரான் தோழர்' என்னும் சிறப்பினைக் கொண்ட சுந்தரர் ஆற்றில் போட்டு குளத்தில் எடுத்த அற்புதம் புரிந்த தலம் இது. அதாவது சிவபெருமான்மீது பதிகம் பாடி சுந்தரர் இங்கு பொற்காசுகளைப் பெற்றார். அவைகளை மணி முத்தாற்றில் போட்டுவிட்டு திருவாரூர் அடைந்து பதிகம் பாடி கோயில் குளத்தில் திரும்பப் பெற்றார்.

விருத்தாபயம் மிகுந்த தம்பதிகளை வணங்கி நல்லாசி பெற்றிட நாம் ஆவலுடன் விழைகிறோம். இங்கு ஆதிசிவனாம் அருள்மிகு விருத்தகிரீஸ்வரரையும் அருள்கனியாம் அம்மை விருத்தாம்பிகையையும் பாத கமலம் பணிந்து வாழ்வில் நாம் உயர் ஓங்கிடுவோம். துயர் நீங்கிடுவோம்.

திரு. ஆர். சுப்பரால்-திருக்கோவலூர்.

சபதம் செய்துவிட்டு வந்தான். அந்த கணமே அசுவமேத யாகம் செய்ய தொடங்கிவிட்டான்.

இதை அறிந்த இந்திரன் பாற்கடலில் சென்று பகவானை சரணம் அடைந்தான். பின்பு அவன் குறை தீர்க்க வேண்டி வாமந அவதாரம் எடுத்து, மகாபலியின் யாகத்திற்குச் சென்றான். மகாபலியைப் பார்த்து, "மாவலி மூவடி தா" என்றான். அதற்கு இசைந்து தாரை வார்க்கச் சென்றான்.

மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வி
யில்
தக்கது இது அன்று என்று தானம்
விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால்
கிளறிய
சக்கரக் கையனே ! அச்சோ வச்சோ,
சங்கமிடத்தானே!
(பெரியாழ்வார் திருமொழி—1-9-7)

இப்படித் துரும்பால் கிளறியவுடன் நீர் தாரை விழுந்தவுடன், உவந்த உள்ளத்தளாய் உலகம் அளந்தான் என்கிறார். இப்படி அளப்பதற்கு காரணம் என்னவென்றால் நமக்குரிமையான நிலத்தை வேறொருவன் அபகரித்துவிட்டால் அதற்காக நாம் பல முயற்சிகள் செய்து அதை தனதாக்கிக் கொள்வதுபோல, இறைவனும் தனக்குரியதான விண்ணும் மண்ணையும் தனது என்று கூற வேண்டி, மாவலியிடம் யாசிக்கும்படியான பேராபத்து உண்டாகி அந்த ஆபத்திற்குத் தடையாக இருந்த சுக்கிரன் கண்ணைக் கிளறி அதன் பின் திருவிக்ரமனாக அவதாரம் செய்து அதன்மூலம் தன் சொத்தை தனத்தாக்கிக் கொண்டான் என்கிறார்.

மாவலி வேள்வியில் மாணுருவாய்ச்
சென்று
மூவடி தாவென்று இரந்த இம்
மண்ணினை
ஓர் அடியிட்டு இரண்டாம் அடி
தன்னிலே
தாவடி யிட்டானால் இன்று முற்றும்,
தரணி அளந்தானாம் இன்று
முற்றும்.
(பெரியாழ்வார் திருமொழி—2-10-7)

இப்படிப் பெரியாழ்வார் பாவநாப்ரக்ஷத்தால் இடைப்பெண்கள் அனைவரும் யசோதையின் பக்கலிலே கண்ணன் செய்திட்ட தீமைகளைக் கூறிமுறையிடும் பாவத்தில் அநுபவிக்கிறார்.

மேலும் ஒருவருக்குக் கிடைக்க முடியாத வஸ்து கிடைத்தது. அந்த வஸ்து திடீரென்று இழக்க வேண்டிய நிலை உண்டாயிற்று. அந்த வஸ்துவே மீண்டும் கிடைக்குமா? என்று பார்க்கும் பேராபத்தைப் போக்கும் விஷயத்தைப் பார்ப்போம்.

ஒரு வித்யாதர மகள் பாற்கடலுக்குச் சென்று இறைவனைப் பாடியதால் மஹாலக்ஷ்மி மிகவும் மகிழ்ந்து ஒரு பூமாலையை அளித்தாள். அதை மகிழ்ச்சியோடு கொண்டு வரும்போது துர்வாஸர் பார்த்து, அந்த பெண்பிள்ளையை ஸ்தோத்திரம் செய்ய அந்த மாலையை முனிவருக்கு கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டாள். அம்மாலையின் பெருமையை யுணர்ந்து அதனைச்சிரமேற்கொண்டு தேவலோகம் சென்றார். அச்சமயம் இந்திரன் தன் ஐராவத யானையின் மேல் வந்து கொண்டிருந்தான். முனிவர், மகா சக்தி வாய்ந்த அந்த மாலையை இந்திரனுக்குக் கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி அந்த யானையின் பிடரியின் மேல் வைத்த அளவில் அம்மத யானை அதனைத் துதிக்கையால் பிடித்து இழுத்துக் கீழே எறிந்து காலால் மிதித்துத் துவைத்தது. அது கண்ட முனிவன் கடுங் கோபங் கொண்டு இந்திரனை நோக்கி "அம்மாலையின் அருமை பெருமை தெரியாமல் அவமதித்ததால் இவ்வாறு செல்வச் செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்கள் எல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவது" என சபித்தார்.

அதன்பின் இந்திரனும், தேவர்களும், திருப்பாற்கடலில் சென்று சரணம் புக, அப்பொழுது பகவான் திருவாய் மலர்ந்தருளி, 'நீங்கள் அசுரர்களைத் துணையாகக் கொண்டு மந்தர மலையை மத்தாக நாட்டி வாஸுகியைக் கடை கயிறாகப் பூட்டி பாற்கடலைக் கடைந்தால் இழந்த செல்வத்தை பெறுவீர்கள்" என்றார். அவ்வாறே தேவர்கள் செய்ய அம்மலை கடலில் அழுந்தி விடாமல் கடைவதற்குச் சுலபமாக இருக்க ஸ்ரீமந்நாராயணன் மஹா கூர்மமாய் அவதரித்து, இழந்த செல்வங்களை வெளிக் கொண்டுவரச் செய்து, அதை தேவர்களுக்கு வழங்கினான் என்பதை,

அடைந்திட்டு அமரர்கள் ஆழ்கடல்
தன்னை
மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி
வடம் சுற்றி வாசுகி வன் கயிறாக
கடைந் திட்ட கைகளால் சப்பாணி !
கார்முகில் வண்ணனே ! சப்பாணி.
(பெரியாழ்வார் திருமொழி—
1-6-10)

அவர்தம் பாசுரம் விளக்குகிறது.

ஆகவே இழந்த பொருள் மறுபடியும் கிடைக்குமோ? என்ற ஆபத்தை போக்கினான் என்கிறார் பெரியாழ்வார்.

மூன்றாவது ஏற்பட்ட பேராபத்து :

'ஆதிமூலம்' என்ற திருப்பெயருக்குரியவர் யார்? என்ற வினா உண்டாகி, அந்த பெயருக்கே ஆபத்து உண்டாயிற்று. அதைப்பற்றி காண்போம்.

கஜேந்திராழ்வான் பொய்கைக்குச் சென்று மலர்களை கொய்து, இறைவனுக்கு அருச்சனை செய்து வந்தது. ஒரு நாள் பொய்கையில் இருந்த முதலையின் பிடியில் அகப்பட்டுக் கொண்டது தன்னை விடுவித்துக் கொள்ள பல முயற்சிகள் செய்தும் முடியவில்லை. பின்பு, 'ஆதி மூலமே' என்று கூவி அழைக்க அந்த

வார்த்தை எல்லா உலகுக்கும் சென்றது. நான்தான் கடவுள் என்று சொல்லும் சிவாதிகளும் கைவிட்டனர். பின்பு, இந்த திருநாமத்திற்கு உரியவர் யார்? என்ற பேராபத்து மூன்று லோகத்திலும் ஏற்பட்டது. அப்பொழுது ஆபத்பாந்தவன், அனாதரக்ஷகனான தீனபந்து, பெரிய திருவடியின் மேல் ஆரோகணித்து பொய்கைக்கரைக்கு வந்து, ஆழியால் முதலையைக் கொன்று, கஜேந்திராழ்வானின் துயரை நீக்கி, அது அளித்த புஷ்பத்தை ஏற்றுக் கொண்டான். இதைப் பெரியாழ்வார்,

> "தாழை தண்ணாம்பல் தடம் பெரும் பொய்கை வாய்
> வாழு முதலை வலைப்பட்டு வாதிப் புண்
> வேழம் துயர் கெட விண்ணோர் பெருமானாய்
> ஆழி பணி கொண்டானால் இன்று முற்றும்
> அதற்கு அருள செய்தானால் இன்று முற்றும்.
>
> (பெரியாழ்வார் திருமொழி— 2-10-8)

என்று கூறுகிறார்.

ஆகவே மேலே சொன்ன மூன்று பேராபத்துக்கள் பகவானுக்கு ஏற்பட்டது. அதை அவனே நீக்கிக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதே என்று பெரியாழ்வார் தன் திருமொழியில் ஒரு பாசுரத்தில் இவை அனைத்தையும் காட்டுகிறார்.

> "நம்பனே! நவின்று ஏத்த வல்லார்கள்
> நாதனே ! நரசிங்கமதானாய் !
> உம்பர்கோன் உலகேழும் அளந்தாய்
> ஊழியாயினாய் ஆழி முன் ஏந்தி
> கம்பமா கரிகோள் விடுத்தானே
> காரணா ! கடலைக் கடைந்தானே!
> எம்பிரான் ! என்னை யாளுடைத்
> தேனே ஏழையேன் இடரைக் களையாயே!
>
> (பெரியாழ்வார் திருமொழி— 5-1-9)

இப்பாசுரத்தில் 'நரசிங்கமதானாய்' என்றதால் பகவானுக்கு ஏற்பட்ட முதல் பேராபத்து என்றும், 'உலகேழும் அளந்தாய்' என்றும் 'கடலைக் கடைந்தானே' என்றதால் இரண்டாவது ஏற்பட்ட பேராபத்து என்றும், 'கம்பமா கரிகோள் விடுத்தானே' என்றதால் பகவானுக்கு மூன்றாவது பேராபத்து ஏற்பட்டது என்றும் பெரியவாச்சான்பிள்ளை இவ்விடங்களை சுட்டிக காட்டி உள்ளம் நீர் பண்டம் (ஐஸ்கட்டி) போல் உருகுகிறார். மேற்கண்ட பேராபத்தை நினைத்து பெரியாழ்வார் அஸ்தானே பயசங்கை பண்ணி பல்லாண்டு பாடுகிறார். மேலும் இறைவன் இடரை நீக்கிக் கொண்டதுபோல அடியேனுடைய இடரையும் களையும்படி பிரார்த்திக்கிறார்.

ஆகவே உலகில் பகவான் இல்லை என்ற நாஸ்திக வாதத்திற்கு உண்டான ஆபத்தையும், எங்கும் நிறைந்திருக்கிறான் என்ற வ்யாபகத்திற்கும் ஏற்பட்ட பேராபத்தை செல்வத் திருமாலே போக்கினான்.

இறைவன் சொத்தை பிறர் அபகரித்ததாலும் இறைவன் தன் ஆஸ்ரிதர்களுக்குக் கொடுத்த செல்வத்தை இழந்தபோதும் ஏற்பட்ட பேராபத்தை பூ மன்னு மாது பொருந்திய மார்பனே போக்கினான்.

ஆதிமூலமே என்ற வாசகத்திற்குப் ஏற்பட்ட ஆபத்தை,'பேர்கள் ஆயிரத்தாய் ! தமியனேன் பெரிய அப்பனே' போக்கினான்.

மேற்கண்ட மூன்று ஆபத்துகளைப் போக்கவும், மனிதர்கள், தேவர்கள், விலங்குகளைக் காத்து ரக்ஷித்தாலும், இவனே உலகிற்கு முழுமுதல் கடவுள் என்பதை இப்பாடலால் நிலை நாட்டப்பட்டது. இப்படிப்பட்ட இறைவனைத் தூயோமாய் வந்து தூமலர் தூவித் தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திப்போமாக.

## நிவேதனம் என்றால் என்ன?

நிவேதனம் என்றால் சுவாமியை சாப்பிடச் செய்வது என்பது பொருளல்ல. "நிவேதயாமி" என்றால் "அர்ப்பிக்கிறேன்" என்றே பொருளாகும். "பகவானே, இந்த வேளைக்கு உன் கருணையால் எனக்கு இந்த உணவு கிடைத்திருக்கிறது. அதற்கு என்னுடைய நன்றி" என்று அறிவித்துவிட்டு கடவுளின் நினைவுடன், நன்றி உணர்வுடன் உண்ண வேண்டும். நமக்குக் கிடைப்பது எல்லாமே பகவான் கொடுத்தது, அதை அவரிடமே காட்டி நன்றி சொல்லி அனுபவிப்பதில் என்ன தவறு?

—ஸ்ரீ பகவான் ரமணர்.

ஆதாரம : கவலையை விடுங்கள்! கடவுளை நம்புகள் எனும் நூல்.

## அடக்கம்

மின்மினிப் பூச்சி தான்தான் உலகுக்கு ஒளி தருவதாக எண்ணியது. ஆனால் நட்சத்திரம் தோன்றியதும் அதனுடைய அகந்தை அடங்கி விடுகின்றது. சந்திரன் தோன்றியதும் நட்சத்திரத்தின் அகந்தை அடங்கி விடுகின்றது. சூரியன் தோன்றியதும் சந்திரனின் அகந்தை அடங்கி விடுகின்றது. அதுபோல நீயும் உனக்கு மேலோர் உள்ளனர் என அறிந்து கொள்!

சொன்னவர்: ஸ்ரீராமகிருஷ்ணர்.

ஆதாரம் : மகான்களின் மணிமொழிகள் எனும் நூல்.

—திரு. மூசிறி சங்கரன்-விராலிமலை.

# சிலம்பில் திருமால் வழிபாடு

திரு. சு. முத்துசுவாமி - திருநெல்வேலி.

தமிழகத்தில் பன்நெடுங்கால மாக திருமால் வழிபாடு நிலவி வந்துள்ளது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலங்களில் வாழ்ந்த மக்கள் தனித்தனி தெய்வங்களை வழி பட்டனர். ஆயினும் காலப் போக்கில் ஒரு நில மக்கள் பிற நிலங்களில் வாழத்தொடங் கியதால் நிலவழி மக்கள் பாகு பாடும் வழிபாட்டு முறையும் மறைந்தது. குறிப்பாக நகரங்க ளில் அனைத்து தெய்வங்களும் வழிபடப் பட்டன. பல்வேறு தெய்வங்களுக்கும் கோவில்கள் இருந்தன.

முல்லை நில மக்களான ஆயர்(யாதவர்) மாயோன் என்ற பெயர் கொண்ட திரு மாலை வழிபட்டனர். இவர் கள் பிற மாநிலங்களிலும், நக ரங்களிலும் குடிபுகுந்தபோது தங்கள் தெய்வமான திருமா லுக்கு அவ்விடங்களில் கோவில் எழுப்பினர். நாளாவட்டத்த தில் அனைத்து தெய்ங்களை யும் வழிபட ஆரம்பித்தனர். பல தெய்வ வழிபாட்டு முறை கடைபிடிக்கப்பட்ட போதிலும் ஒவ்வொரு இனத்தாரும், தத் தம் இன தெய்வங்களை வழி படுவதற்கு அதிக முக்யத்துவம் அளித்தனர்.



சிலப்பதிகாரம் கடைச்சங்க கால நூல். கி.பி. இரண் டாம் நூற்றுண்டில் தோன் றிய இந்நூல் சமணத்துறவி இளங்கோவடிகளால் ஆக்கப்பட் டது. அனைத்துச் சமயங்க ளையும் மதித்த அடிகள் தம் நூலில் அக்காலக் கட்டத் தில் பல்வேறு தெய்வங்களை யும் வழி பாட்டு முறைகளை யும் விவரித்துள்ளார்.

மூவேந்தர் மண்ணிலும் நடை பெற்ற கதை சிலப்பதிகாரம் அந்நாடுகளிலுள்ள நகரங்கள், கிராமங்கள், அங்கு வாழ்ந்த மக் கள் நிலை ஆகியவை இக்காப் பியத்தில் படம் பிடித்துக் காட் டப்பட்டுள்ளன. இக்காப்பியம் காட்டும் திருமால் வழிபாடு பற்றிய செய்திகளைக் காண் போம்.

தமிழகமெங்கும் திருமாலுக் குக் கோவில்கள் இருந்தன. கண்ணனின் அண்ணன் பலதே வருக்கும் தனிக்கோவில்கள் பல இருந்தன புகார் நகரில் இந் திர விழாவின் போ்து பல்வேறு

தெய்வங்களுக்கான கோவில்களிலும் விழா எடுக்கப் பட்டது. அப்போது,

"வால்வளை மேனி
வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன்
கோவிலும்

விழாக்கோலம் பூண்டன. வெண்சங்கு போன்ற நிறத்தையுடைய பலதேவருக்கும், நீல மேனியுடைய நெடியோனுக்கும் புகார் நகரில் கோவில் இருந்த செய்தி இதன் மூலம் தெரிகிறது.

காப்பியத்தில் உப காதையாக வரும் "மாலதி" கதையிலும், பலதேவர் கோவில் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. பாலூட்டும் போது மாற்றான் குழந்தை பால் விக்கி இறக்க, அதனை எடுத்துக்கொண்டு மாலதி பல் வேறு கோவில்களிலும் சென்று புலம்புகிருள். அவ்வமயம் அவள் பலதேவர் கோவில் சென்று முறையிட்ட செய்தி கனாத்திறம் உரைத்த காதையில் இடம் பெற்றுள்ளது.

கோவலன் தன் காதல் மனையாளுடன் புகார் நகர் துறந்து மதுரை நோக்கிப் பயணப்படுகிருன். அப்போது,

"அணிகிளர் அரவின்
அறிதுயில் அமர்ந்த
மணிவண்ணன் கோட்டம்
வலம் செயாக் கழிந்தன"

புகார் நகரப் பெருமாள் கிடந்த கோலத்தில் இருந்தாரென்பதை இவ் வரிகள் வெளிப்படுத்துகின்றன.

மதுரை செல்லும் வழியில் கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவரும் மாங்காட்டு மறையோனைச் சந்திக்கின்றனர். மாங்காட்டு மறையோன் திருமால் அடிதொழுபவன். அவன்,

"நீலமேகம் நெடும்பொன்
குன்றத்துப்
பால் விரிந்தகலாது
படிந்தது போல
ஆயிரம் விரிந்தெழு
தலையுடை அருந்திறல்
பாயல் பள்ளிப் பலர்
தொழுதேற்ற
விரிதிரைக் காவிரி வியன்
பெருந்துருத்துத்
திருமார்பன் கிடந்த
வண்ணமும்

திருவேங்கடமுடையானின் கோலமும் காண விழைந்தவன். கிடந்த கோலத்திலுள்ள திருவரங்கநாதனையும், நின்ற கோலத்திலுள்ள திருவேங்கடவனையும் காணப்புறப்பட்டவன் அம்மாடல மறையவன். திருவேங்கடத்தையும், அதில் கோயில் கொண்டுள்ள பெருமாளையும் மறையவன் வாயிலாக வர்ணிக்கிருர் அடிகளார்.

"அவ்வேங்கடம் ஓங்கு உயர் மலை. அதனின்றும் வீங்கு நீர் அருவி பாய்கிறது; இருபுறமும் உள்ள சிகரங்கள் விரிகதிர் ஞாயிறும் திங்களும் போல் திகழ்கின்றன; நடுப்பட்ட நிலத்தில் செங்கண் நெடியோன் நிற்கிருன். அவனுடைய தகைபெரு தாமரைக் கரங்களில் பகையணங்கு ஆழியும், பால் வெண் சங்கமும் ஒளிர்கின்றன; நலம்கிளர் ஆரம் மார்பில் தவழ்கிறது; பொலம்பூ ஆடையில் அவ் வேங்கடவன் பொலிந்து நிற்கிருன்."

அம்மறையோன் கோவலன் முதலான மூவரையும் மதுரை மூதூருக்கு வழிப்படுத்துகிருன். திருமாலிருஞ்சோலை வழியாக மதுரை செல்லலாமெனக் கூறிய அவன், அச்சோலையின் கண் எழுந்தருளி அருள்பாலிக்கும் பெருமாளின் பெருமையையும் விளக்குகிருன்.

மூவரும் மதுரை நகரை நண்ணினர் அந்நகரிலுள்ள பல கோவில்களும் அவர்களுககுத் தெரிகின்றன. சோழன் நகரில் உள்ளது போல் பாண்டியன் நகரிலும்,

"உவணச் சேவல்
உயர்ந்தோன் நியமமும்
மேழி வலன் உயர்ந்த
வெள்ளை நகரமும்"

உள்ளன. திருமால் கோவிலின் உச்சியில் உவணச்சேவல் (கருடன்) கொடியும், பலராமன் கோவிலில் கலப்பைக் கொடியும் பறக்கும் காட்சியை அவர்கள் காண்கின்றனர்.

வஞ்சிக் காண்டத்தில் மலை நாட்டு வைணவத் தலமான திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி பற்றிக் குறிப்பிடுகிருர் அடிகள். செங்குட்டுவன் வட நாடு நோக்கி படை செலுத்திச் செல்லும் போது,

"ஆடக மாடத்து அறிதுயில்
அமர்ந்தோன்
சேடம் கொண்டு சிலர்
நின்றேத்தினர்"

இவ்வாறு மூவேந்தர் நாடுகளிலும் வைணவத் திருத்தலங்

கள் இருந்தன என்பதும், அத்தலங்களில் பெருமாள் கிடந்த கோலத்திலும், நின்ற கோலத்திலும் காட்சி தந்தார் என்பதும், அத்தலங்கள் காலத்தை வென்று இன்றும் அருள்பாலிக்கின்றன என்பதும் கண்கூடாகிறது.

சிலம்பில் வைணவக் காவியங்களான மகாபாரதம், பாகவதம் ஆகிய புராணங்களிலுள்ள பல்வேறு நிகழ்ச்சிகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

இந்திர விழாவில் மாதவி பல்வகை நடனங்கள் ஆடுகிருள். அவற்றில் "அல்லியத்தொகுதி" என்னும் ஆட்டம், கம்சனால் ஏவப்பட்ட யானையைக் கண்ணன் அடக்கிய காட்சியைக்குறிப்பதாகும். அஞ்சன வண்ணன் வாணசுரனை வதைத்த காட்சியை "மல்லாடல்" என்ற ஆட்டம் மூலம் விளக்குகிருள் அவள். திருமால், மூன்றடி மண் கேட்டு உலகளந்த காட்சியை "குடக்கூத்து" மூலம் விளக்குகிருள். சகடாசுரன்வதம், மருத மரங்கள் வீழ்ச்சி ஆகியவை கண்ணனால் கோகுலத்தில் நிகழ்த்தப் பட்டவை. ஆனால் இந்நிகழ்ச்சிகளைக் கொற்றவையோடு தொடர்பு படுத்தியுள்ளார் அடிகளார்.



ஸ்ரீஜம்புகேஸ்வரர் கோயில் - திருவானைக்காவல

கவுந்தியடிகள், கண்ணகியைக் கண்ணன் வழிவந்த மாதரியிடம் அடைக்கலம் தந்து,

"ஆயமும் காவலும்
ஆயிழைத் தனக்குத்
தாயும் நீயேயாகித் தாங்கு"

எனவேண்டுகிருர். திருமால் அடியாராகிய மாதரி, இருவரையும் தன் இல்லம் அழைத்து வந்து அவர்கள் உண்டு மகிழ ஏற்பாடு செய்கிருள். கண்ணகி உணவு படைக்க கோவலன் உண்ணும் காட்சியைக் கண்ணுற்ற மாதரியும், அவள் அருமை மகள் ஐயையும்,

"ஆயர்பாடியின் அசோதை
பெற்றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன்
கொல்லோ
நல்லமுது உண்ணும்
நம்பி ஈங்குப்
பல்வளைத்தோளியும்
பண்டுநம் குலத்துத்
தொழுனையாற்றினுள்
தூமணி வண்ணனை
விழுமம் விளக்குக் கொல்"

என வியந்து பாராட்டுகின்றனர், கண்ணனைக் கருத்தில் கொண்ட அவர்களுக்கு கோவலன் கண்ணனாகவும், கண்ணகி நப்பின்னையாகவும் காட்சியளித்தது வியப்பில்லைதான்.

தீய நிமித்தஙகளைக கண் ணுற்ற மாதரி, அவறறிறகு மாற் ருக

"ஆயர்பாடியில் ஒரு
மன்றத்து மாயவனுடன்
தம்முன் ஆடிய வால சரிதை
நாடகங்களின் வேல்
நெடுங்கண் பிஞ்னையோ-
டாடிய குரவையாடுதும்"

எனககூறி குரவைக்கூததிற்கு ஏற்பாடு செயகிருள கணணன், பலதேவன, நப்பினனை மற்றும் கோபிகைகள சேரநதாடிய நடனம் குரவைககூததாகும்

குரவைககூததாடும இடைககுலச் சிறுமியர,

"கன்று குனிலாக்கனி
உதிர்த்த மாயவன்"
"பாம்பு கயிருக்
கடைந்த மாயவன்"
"கொல்லையம்சாரற்குகுருந்
தொசித்த மாயவன்"

எனககூறி திருமாலின் அருஞ் செயலகளைப புகழ்கின்றனர கடலைக் கலக்கிய அம்மாயனின் கரங்களஅசோதையிடம் கடடுண்டதை,

"வடவரையை மத்தாக்கி
வர்சுகியை நாணுக்கிக்
கடல்வண்ணன்
பண்டொரு நாள்
கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை அசோதையார்
கடை கயிற்ருல் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாயாய்
மாயமோ மருட்கைத்தே!

என வியநது பாடுகின்றனர்

உறி வெணணெயயும், மணணும உணட நிகழ்ச்சியை,

"அறுபொருள் இவன் என்றே
அமரர்
கணம் தொழுதேத்த
உறுபசி ஒன்றின்றியே
உலகு அடைய
உண்டனையே
உண்டவாய்களவினால் உறி
வெண்ணெய் உண்டவாய்
வண்டுழாய் மாலையாய்
மாயமோ மருட்கைத்தே

எனப்புகழ்நது ஆடுகினறனர்

செங்கமல இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடநதது, சேவடி சேப்ப தம்பியோடும் கான்போநதது, தொல்லிலங்கை கட்டழித்தது ஆகிய செயதிகளை விரித்துரைக்கும அவ்வாச்சியர்,

"சேவகன் சீர்கேளாத செவி
என்ன செவியே
திருமால் சீர் கேளாத செவி
என்ன செவியே"

"பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை
ஏத்தாக நாஎன்ன நாவே
நாராயணு வென்னா
நாஎன்னநாவே"

என்றெலலாம் கூறித தஙகள குல தெயவமான திருமாலை வழுததி வழிபடுகினறனர

திருமாலடியார அடைககலம காக்க உயிரும தூறப்பர என பதும, அவரகள மறுமையிலும அடியாரகளாகவே பிறபபர என் பதும் மாதரியின வாழ்க்கை மூலம காட்டபபடுகிறது கோவலன் கொலையுணடு கணணகி மதுரையைத தீக்கிரையாககியதும, மாதரி,

"கோவலன் தீதிலன்
கோமகன் பிழைத்தான்
அடைக்கலம் இழந்தேன்
இடைக்குல மாக்காள
குடையும் கோலும்
பிழைக்தவோ"

எனககூறி அழுதவாறு இரவில தீககுளிதது மாணடு போனாள். இவ்வாறு உயிரநீத்த மாதரி திருமால் தொண்டன் சேடக் குடும்பியின் மகளாய மலைநாட்டில் பிறந்து நாராயணன் தொண்டைத தொடரநதாள் என்ற செய்தியும் சிலம்பில் இடம்பெற்றுள்ளது



## ஆண்டவனை அடைய...

ஆண்டவனை அடையப் பண்டிததியம் தேவையிலலை. விசுவாசமும், மனததூய்மையும், பகதியுமதான தேவை! தீவிர அருள் தாகம இருப்பவனுககு ஆணடவன் அருள் தவருது கிடடும். அவன முயற்சி ஒருகாலுமம வீணுகாது

-சுவாமி சிவானந்தா

திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

# பெண்மையால் உலகின் நன்மை

திரு. வெ. சுந்தரமய்யர் - பரமக்குடி.

எந்நாளும் நன்மைகள் இவ்வுலகில் நிலவிடவே அன்னை தானே துணை என்பதை யாரும் மறுப்பார் இல்லை. அம்மையப்பனாக அருள்பாலிக்கும் அற்புதமும் இம்மையில் பெண்மையாலே நன்மைகள் பலவென்று பரிந்துரைக்கும் செயல்தானே!

கல்விக்குத் தெய்வமாகக் கலைமகளைப் போற்றலுண்டு. பொருளுக்குத் தெய்வமாக திருமகளை தினம் வணங்கும் செய்கையுண்டு. சக்தி மிகுந்தாலே சித்திகள் நிறைக்கலாம் என அன்னை சக்தியை அனைவரும் வணங்குவர்.

மண்ணையும் பூதேவி என்பார். நீரோடும் நதிகளையும் பெண்மையென்றே நாளும் கூறுவார். பெண்மையால்தான் உலகின் நன்மைகள் என்றுணர்த்தும் உண்மைகள் பலவுண்டு.

இறையேற்கும் திருமணங்கள் எல்லாம்கூட பெண்மைக்கு உயர்வு பார்வதி பரிணயம், வள்ளித் திருமணம், லெட்சுமிக் கல்யாணம், மீனாட்சிக் கல்யாணம், வத்சலா கல்யாணம் எனப் பலவாறும் பெருமைப் படுத்தும்.

ஆண் ஒருவன் வெற்றிக்கு ஆங்கே துணை நின்று பெண்மை அடக்கமுறும். அறிவியல் கூட பின்னியக்க சக்தியால்தான் முன்னோக்கிச் செல்லும் வெற்றி என விளக்கும்.

வில்லின் பின்னோக்கி இழுக்கும் விசைக்கு ஏற்ப, அவ்வில்லிலிருந்து முன்னோக்கிச் செல்லும் அம்புகளின் திறன் வெளிப்படும். துப்பாக்கியின் பின்னியக்க சக்தியால்தான் குண்டுகள் முன்னோக்கிச் சீறிப் பாய்கின்றன. இத்தன்மைகளைப் போன்றே ஆணின் வெற்றிக்குப் பெருமைக்கு, சிறப்பிற்குப் பெண்மை பின்னின்று உதவும் சக்தியாகத் துணைபுரிந்து அடக்கமுடைய நிலை தன்னை ஏற்றுக் கொண்டது. இக்காரணம் பற்றியே "பெண் புத்தி பின்புத்தி" என்ற பழமொழியும் நன்மையுணர்த்தத் தோன்றியது.

காலப்போக்கில் பழமொழிகளின் கருத்துக்கள் பல மாறியது போல பெண்மையின் உண்மை நிலை உணர்த்தும் பொருள் கூட மாறிவிட்டது. மாறினாலும் பரவாயில்லை. இழிந்த பொருளில் வழங்கி பெண்மை மாசுற வைத்த



நிலை ஏற்பட்டது வருந்துதற் குரியது

மனிதனும் தெய்வநிலை எய்திட பெண்மைதான் பெருந்துணை என்பதை இறையுணரத்தும் கண்களிரண்டின் ஒன்று சேர்ந்த பார்வை நெடுநோக்குக் கொண்டதாகவும் பக்க நோக்கும் கொண்டும் பயனுறச்செய்யும் தன்மை போல ஆணும் பெண்ணும் அமைந்த வாழ்வில் பெண்மையின் சிறப்பு தெய்வச் செயல்களிலும் உண்டு.

திருமணம் என்ற புனிதம், மானிடர்க்கேயன்றி பிற உயிரினங்கட்கு இல்லையே! தெய்வத் திருமணங்களும் மானிட வாழ்வின் உயர்வுக்கு வழி காட்டுவனாக அமைந்தவைகள் தாமே.

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முச்சக்தியினாலே முழுமை பெற்றுள்ளது இவ்வுலகு. எச்செயல்பாடும் இம்மூன்றனுள் அடங்கியுள்ளதென்பதை அனைவரும் ஏற்றதொன்றும்.

ஆக்கல் தொழில் பிரம்மாவால் நடத்தப்படுகிறது. காத்தல் தொழில் திருமாலால் நிகழ்வதாகும். அழித்தல் தொழில் - சிவனால் செம்மைப் படுத்தப்படுகிறது. "யாவரும் அறிந்த ஒன்று தானே இதில் புதிதாக என்ன இருக்கிறது?" என எண்ணத்தோன்றும். சற்றே ஆழ்ந்து சிந்தித்தால் பெண்மையின் பிறப்பும் மானுடர் வாழவேண்டிய முறையும் தெளிவாக்கியுள்ள தன்மை புலனாகும்.

பிரம்மாவின் துணை கலைமகள் அன்றோ? ஒன்றை உருவாக்க வேண்டுமானால் அதைப்பற்றிய நுட்பங்களை அறிந்திடும் அறிவு மிக அவசியம். கல்விக்கடவுள் கலைமகள். கல்விதான் அறிவின் திறனை வெளிப்படுத்தும் அற்புதக்கருவி. எனவே அறிவின் துணை கொண்டு ஆக்கப்படல் வேண்டும்.

கலைமகளாம் அறிவின் துணை கொள்ள, அறிவின் தூண்டுதலால் ஆக்கல் அமைகின்றது. பெண்மை பின்னின்று தூண்ட, உதவிட ஆண்மையால் ஆக்கல் நிகழ்கின்றது.

வாழ்க்கை வளமுறைக்கு செல்வம் அவசியம். ஆம், உணவு, உடை, உறைவிடம் செம்மையுற பொருள் தேவை. இதனாலே 'அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை, பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை" என்று கூறும் நிலையும் ஏற்பட்டது.

பொருளுக்கு அதிதேவதையாக திருமகள் இலங்குதலை அறிந்து வழிபடுகிறோம். செல்வத்திருமகளின் துணையால் திருமாலும் தனது காத்தல் தொழிலைத் திறம்பட நடத்துகின்ற உயர்நிலையை, திருமகளின் பின்னியக்க சக்தியை ஆதாரமாகக் கொண்டு செயலாக்குவதை உணர்ந்து வாழ்வின் பொருளாதார அடிப்படை பெண்மையால் என்பதை அறிந்து செயல்பட ஏதுவாகிறது.

அழித்தல் என்பது முழுமையாக இல்லாமல் செய்வது என்ற பொருள் அல்ல. ஒன்றை அழித்தால் மற்றொன்று உருவாக்கல் ஆகும். பிரளயம் ஏற்பட்டு உலகழிவு நிகழ்ந்தாலும் (யுகங்கள் மாறினாலும்) முற்றிலும் அழிவு ஏற்படுவதில்லை. ஒரு சில உயிர்கள் இருக்கும். அவற்றிலிருந்து பிற தோற்றமாகும் எனப் புராணங்கள் கூறுவதை அறிவியலும் ஏற்றுக்கொண்டுள்ளது.

மரத்திலிருந்து கரியும், கரியிலிருந்து வைரமும் என்று ஒன்றிலிருந்து மற்றொன்று தோற்றமாகும். சான்றாக பலகாலம் வாழ்ந்து வைரம் பாய்ந்த மரங்களின் பகுதிகள் கதவுகள், நிலைகள், உத்திரங்கள், தூண்கள் போன்ற பல்வேறு பொருள்களாக உருமாற்றம் பெறச் செய்து பயனாக்கப்படுகின்றது.

அரிசியை அழித்தால் மாவாகும். மாவை அழித்தால் உண்ணும் பொருளாகும். இவ்வாறு மாற்றப்படும் செயலே ஒரு பொருளை அழித்துப் பல பொருட்களாகப் பரிணமிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட அழித்தாக்கல் நடைபெற சக்தி தேவை

எனவே சக்தியின் துணை கொண்டு புதியதாகச் செயலாக்கும் பணியை சிவபெருமான் கையாண்டு வருவதால் அழித்தல் என்ற தொழிலின் அதிபதியாக விளங்குகிறார்.

அறிவின் துணையால் ஆக்கலும், பொருளின் துணையால் காத்தலும், சக்தியின் துணையால் ஒன்றினை மாற்றி புதியன ஏற்படுத்துதலும் இறை

வன் செயல் எனக் கூறப்பட்டது.

இதே செயல்பாடுகள் மானிடருக்கு முழுமையாகப் பொருத்தப்படுகின்றதை உணர வேண்டும். பிற உயிரினங்கள் திருமணம் செய்து கொள்வதில்லை. புதியன உண்டாக்குவதில்லை. அறிவின் செயல்பாடும், அதனால் ஏற்படும் கண்டுபிடிப்புகளும் பிற உயிரினங்கள் கொள்ளவில்லை. பொருள் தேடி வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிச் செம்மையுற வாழ்வதுமில்லை. ஒன்றை அழித்து பிறவற்றை அதில் உருவாக்குவதுமில்லை.

மானிடர் இச்செயலை செய்வதாலேயே ஆறறிவு கொண்டார் எனப் போற்ற முடிகிறது. ஆறு என்றாலே பாதை என்ற பொருள் தானே! நல்ல பாதைகளை அமைத்து பல்லோரும் பயனுறச்செய்யும் சிறப்புப் பெற்றவர்களே ஆறறிவு பெற்றவர்களாவர்.

ஆறறிவு பெற்று ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலை அழகுறச் செய்பவர்கள் தெய்வநிலை பெற்றவர்களாவர். அவர்களை மக்கள் மறவாது போற்றிப் பணிகின்றனர்.

இம்முத்தொழிலின் முதன்மை பெற பின்னியக்கச் சக்தியாக, பெண்மையே பெரிதும் துணை புரிகின்றது. இவ்வுண்மையை உணர்த்தவே தெய்வத்திருவுருவங்களும் அவற்றின் செயல்பாடும் விளக்கப்பட்டது.

பெண்மையால்தான் உலகின் நன்மைகள் பெருஞ்சிறப்படை



சிவாஜலபதி கோயில் - சிவன்மலை

கின்றதென்பதை உணர்ந்து தெய்வங்கள் காட்டிய உண்மைகள் வாழ்வின் வழிகாட்டிகள் என அறிந்து வாழ்வில் பெண்மை வாழ, பெருமை மிக, நன்மைகள் நாட்ட வழிவகுப்போம்.

பெண்ணடிமை, பெண்கொடுமை மாற ஆண்மையும் பெண்மையும் அன்பால் அமைக்கும் பணி சிறந்து, மனிதன் மனிதருள் உயர்ந்து, மாண்புடைய தெய்வநிலை பெறவேண்டும்.

பெண்கள் நெற்றியில் குங்குமம் மங்கலம் மிகுக்கும். அதன் மேலே திருநீரு அணிவது பழக்கம். நெற்றியில் மேல்புறம், வகிடு எடுத்து பின்னுமிடத்தில் குங்குமம் இடுவார்கள்.

இல்லத்திற்கு வெளியில் ஆண்மைக்கு அடங்கிய பெண் எனக்காட்ட திருநீறு மேலாகவும், குங்குமமும் இடுவார்கள். இல்லத்தில் பெண்மை மேலோங்கி சிறப்புறச் செய்யும் போது ஆண்மை அதை அங்கீகரிக்கின்றது.

மேலே குங்குமம், நடுவில் திருநீறு, கீழே குங்குமம் என முறைமைப் படுத்தியதின் பொருள் உணரவேண்டும். பின்னியக்கச் சக்தியாக தூண்டலும், ஆண்மைக்கு உயர்வளித்தலும், பெண்மையால் பெரும் பயன் அமைந்தாலும் ஆண்மைக்கு அடங்கி அடக்கமுடன் வாழ்வதையும் விளக்கும் அரிய உண்மைகளை நம் முன்னோர்கள் அற்புதமாக விளக்கியுள்ளார்கள்.

நன்மைகள் நிலை பெற, உண்மைகள் உயர்ந்தோங்க, கண்களை இமைக் காப்பது போல் பெண்மையைச் சிறப்புறக் காத்து வளர்ப்போம்.



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்.

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. சி. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 60/-

வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

(48-ம் பக்கம் பார்க்க)

# கோபம்

திருமதி. உமா ஹரிகரன் - ஆலப்புழை.

கோபம் கொண்டவனின் மனம் அமைதி அடையாது. கெட்ட காரியம் செய்ய ஒருவனைத் தூண்டுவது இந்த கோபமும் காமமும் தான். நிம்மதியின் எதிரி இந்த கோபம் தான். கோபமும், தாபமும் பலவீனத்தின் அடையாளங்கள். "க்ருத்தோ ஹன்யாத் குருனபி" கோபம் வந்தவன் எதற்குமே துணிந்து விடுகிறான்.

கிராமங்களில் சொல்லுவார்கள், 'கோபம் வந்து விட்டால் கோபுரவாசலில் தலை நுழையாது, குண்டுச்சட்டியில் கை நுழையாது' என்று. அதாவது கோபுர வாசல் இருக்க அதன் வழியாக போகாமல் ஓரத்தில் தலையை முட்டிக்கொள்வார்களாம். பெரிய குண்டுச் சட்டியில் கைவிடாமல் அடிப்பாகத்தில் கை விட முயற்சித்துக் கரியை முகத்தில் பூசிக் கொள்வர் என்பர். ஆசையின் மற்றொரு வடிவம் கோபம். நாம் கோபப்படும் போது உடம்பெல்லாம் விஷமாக மாறுகிறது. ஆகையினால் தான் "ஆறுவது சினம்" என்ற கோட்பாடு வந்தது. நாம் நம்மை இழந்து கோபப்படும் போது, புத்தியை இழந்து செய்யத்தகாத செயலை செய்து விடுகிறோம்.

கோபம் வரும் போது நாம் பேசும் பேச்சு எவ்வளவு பேரைக் கஷ்டப்படுத்தும் நம்மைப்பற்றி அவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். பொறுமைக்காரன் நண்பர்களைத்தான் இழக்கிறான். ஆனால் கோபக்காரன் அவனையே அல்லவா இழந்துவிடுகிறான்!

நக்கீரர் பாடிய "கோபப்பிரசாதம்" என்பது பரமசிவனின் கோபத்தால் விளைந்த அழிவுகளை எண்பத்தேழு வரிகளில் விவரமாகக் கூறியுள்ளதாகும். கோபத்துக்கு ஆளானவர்கள் பிரம்மன், காமன், யமன், திருபுரர், இராவணன், தக்ஷன், யானை, சலந்திரன், அக்னி, சூரியன், சந்திரன், தாருகன், கருடன் ஆகியோர் அருளுக்குப் பாத்திரமானவர்கள் திருமால், கண்ணப்பன், சண்டேஸ்வரன், நந்தி, காக்கியன், பிருஹ்கி, பார்த்தன், மார்க்கண்டேயன், சிலந்தி, சனரகதி முதலியவர்கள்.

சிறுமையைக் காணும் போது முனிவர்கள் கோபம் அடைகிறார்கள். முனிவர்கள் கோபப்படும் போது உலகத்திற்கு எவ்வித கேடும் விளையவில்லை. அவர்களும் பலமுறை கோபத்திற்கு அடிமையாகி பிறகு அதை வென்றுள்ளனர். பாம்பு நைந்து போன தன் மேல் தோலை பொறுமையுடன் நீக்குவது போல் கோபத்தைப் பொறுமையுடன் நீக்க வேண்டும்.

நாம் செய்யும் எல்லாப் பாவத்துக்கும் அதிபதி கோபம் தான் நாம் நினைத்த காரியம் நடக்காத போது, நாம் ஆசைப்பட்டதை அடையாத போது, நம் விரோதி பெரிய நிலையில் இருக்கும் போது, நம்மை ஒருவர் ஏளனம் செய்யும் போது, கோபம் வருகிறது. புயல் வேகத்தில் இந்தக் கோபம் வரும் போது "அம்மா, எனக்குப் பொறுமையைத் தா, பகவானே இனியும் கோபப்பட்டு என்னைப் பாவத்தில் தள்ளாதே" என்று மனம் உருகத் தியானிக்க வேண்டும். இந்தக் கோபம் நரகத்துக் கதவு. இதன் பிறப்பிடம் முட்டாள்தனம்.

இராமனிடத்து தனியாக ஒரு ரிஷி அயோத்திக்கு வந்திருந்தார். தான் பேசிக்கொண்டிருக்கும் போது யாரையும் உள்ளே விடக்கூடாது என்று கேட்டுக்கொண்டார். இலக்குவன் காவல் இருக்க, அந்த நேரத்தில் துர்வாசர் இராமனைக் காண வருகிறார். துர்வாசரின் கோபம் பயங்கரமானதல்லவா? அதனால் அவர் கோபத்தை தணிக்கும் பொருட்டு, இராமர் முன்னால் வந்து நின்றான் இலக்குவன். இராமரின் கட்டளை மீறியதால் அவனை நாட்டினின்று பகிஷ்கரிக்க வேண்டியதாயிற்று. இதை மேலோட்டமாகப் பார்க்கும் பொழுது, துர்வாசருடைய கோபத்தால் தானே இராமர் இலக்குவனை இழக்க நேரிட்டது என்று தோன்றும்.

ஆனால், ஸ்ரீராமர் பூவுலக வாழ்க்கையை விரைவில் முடித்துக்கொண்டுவர துர்வாசருடைய கோபம் உதவியது. மானிடப்பிறவி எடுத்த இராமர் பந்த பாசத்தில் கட்டுண்டு, காலமெல்லாம் மானி

லவே! சரீரம் எடுத்து அதன் மூலம் செய்து முடிக்க வேண்டிய காரியத்தை முடித்த பிறகு உயர்ந்த நிலைக்கு போவது தான் குறிக்கோள் ஸ்ரீராமர் உடலை விடுவதற்கு துர்வாசர் கோபம் பயன்பட்டது. கோபத்துக்குப் பலமுறை அடிமையாகி விஸ்வாமித்திரர் அதை வென்ருர். முனிவர்களின் கோபம் கடைசியில் நலனுக்காகவே அமைந்திருக்கிறது.

சிவனின் கோபத்தினால் பிரம்மன் சிரம் இழந்தான். யமன் உயிர் இழந்தான். திரிபுரம் சாம்பலாயிற்று. தக்ஷன் தலை இழந்தான். சூரியனுக்கு பல் போயிற்று. அக்னியின் கை ஒடிந்தது.

"சினம் என்னும் சேரந்தாரைக் கொல்லி

இனம் என்னும்

ஏமப் புணையைச் சுடும்"

கோபம் என்னும் தீ தன்னையேயல்லாமல், தனக்கு பாது அழிக்கும் என்கிருர் வள்ளுவர். சிரிப்பையும், ஆனந்தத்தையும் மறைக்கும் கோபம் ஒருவனுடைய வாழ்க்கையையே கெடுத்துவிடும். துன்பம் அடையாமல் இருக்க தன்மனதில் கோபம் வராமல் பாரத்துக் கொள்ள வேண்டும். இறைவன் அருளால் கிடைக்கும் அமைதியை நாம் அடைய தடையாக இருப்பது கோபமேதான்.

வெளியே காட்டிய கோபம் மன்னிப்புக்கு வழி தேடும். உள்ளே அடக்கி வைக்கும் கோபம் பழிவாங்க வழிதேடும். நம்மை எப்படியெல்லாம் சித்திரவதை செய்கிறது. எத்தனை பேருடைய வெறுப்புக்கு ஆளாகிறேம். நாம் நினைத்தது நடக்காவிட்டால் கோபம் வருகிறது. எத்தனை உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர்களானாலும் கோபத்தால் ஒரு நிமிஷத்தில் அந்தக் குடும்பமே நாசமாகிவிடும்.

விலை மிகுந்த தவிர்க்க முடியாத பொருள் கோபம். அதை செலவழிக்கும் போது மனிதர்களுக்குக் கிடைக்கும் இலா கோபத்தோடு எழுந்திருப்பவன் நஷ்டத்தோடு உட்காருவான். பேராசையே காரணம். நாம் கோபப்படும் போது அவர்கள் மன்னிப்பு கேட்டால், நாம் மன்னிக்கும் போது நம் கோபமும் மறைந்துவிடுகிறது.

"கோபம் என்ற இருள் மனத்தைச் சூழ்ந்து கிடந்தால், செய்ய வேண்டிய காரியத்தை மனிதன் செய்யமாட்டான். அப்போது சாஸ்திரம் என்ற விளக்குதான் வெளிச்சம் காட்டும்" என்கிருர் பாரதியார்.

எப்படியாவது ஒரு காரியத்தில் வெற்றியடைய வேண்டும் என்ற எண்ணத்தில் உணர்ச்சி வேகம் அதிகமாவது கோபத்தின் அடையாளமே. சங்கல்பங்களையும் கவலையும் விட்டுவிட்டால் கோபம் தானாக மறையும். கடிவாளத்தைப் பிடிப்பவன் அல்ல சாரதி. குதிரையை அடக்குவது போல கோபத்தை எவன் அடக்குகிருனோ அவனே சாரதி அடர்ந்த காட்டில் ஒரு புதிய பாதை அமைவது போல ஏராளமான எதிர்ப்புகளை நாம் வெல்ல வேண்டும். கோபம் உள்ளவனை விட்டு எல்லோரும் விலகுவார்கள். தர்மமும், சத்தியமும் விலகிப் போகும்.

பகவான் ஸர்வ பூத ஸுக்ருத்தாக இருப்பதற்கு காரணம் அவர் தயாநிதியாக இருப்பதே யாகும். "ஸர்வபூத ஸுஹ்ருதம் தயாநிதிம்" என்ருர் ஆன்ருேர் ஒருவர். இரக்க குணம் வளரும் போது கோபம் மறைகிறது.



## மனுக்கள்

இறைவன் பூமியைப் படைத்தபோது பரிபாலனம் செய்வதற்கென பதினான்கு மனுக்களைப் படைத்தார்.

அவர்கள் சுவாயம்புவன், சுவாரோசிடன், உத்தமன், தாமசன், ரைவதன், சாட்சூசன், வைவசுதவன், சூரிய காவர்ணி, தட்ச சாவர்ணி, பிரம்ம சாவர்ணி, ருத்ர சாவர்ணி, தர்ம சாவர்ணி, ரௌசியன், பௌசியன் ஆகியோராவார்.

மனு மன்னர்கள் நீதி தவருமல் அரசாட்சி செய்தனர். அதன் சாராம்சம் தான் 'மனுநீதி' ஆயிற்று.

க. இராமலிங்கம் புதுப்பேட்டை.

# இரண்டு கண்கள்

கவிஞர். திரு.சோமசுந்தரப்பெருமாள்-தங்கவயல்.

இரண்டோடு இவ்வுலக இயக்கமும் உயிரின் இயக்கமும் நடப்பது கண்டு நம் சிந்தையில் அதனை ஏற்றிப் பார்க்கும் போது இரண்டு என்பதே இனிமையுடைய சொல்லாகவே நமக்குப்படுகிறது. ஆண் பெண், இரவு பகல், சூரியன் சந்திரன் இருள் ஒளி, இன்பம் துன்பம், சக்தி சிவம், விண் மண் என்று நமக்கு நமது வாழ்க்கைக்கு ஆதாரமாக அமைந்த விதம் இங்கு ஒப்பு நோக்க வேண்டியுள்ளது.

ஒரு காகிதத்தை எடுத்துக் கொண்டால் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒரே பக்கம் உள்ள காகிதத்தை உங்களால் காட்ட முடியுமா? முடியாது. அது போல் இரு பக்கங்களாக இணைந்ததே சைவமும் வைணவமும் ஆகும். நம் உடலில் கண்கள் இரண்டு, செவிகள் இரண்டு, நாசி இரண்டு, கரங்கள் இரண்டு, கால்கள் இரண்டு என்று நமது நலத்துக்காக உறுப்புகள் எப்படி அமைந்தனவோ அது போல் இந்து மதத்தின் நலத்துக்காக தோன்றியவையே சைவமும் வைணவமும் ஆகும். அறியாமையால் இன்றும் நாட்டின் பல பகுதிகளில் சைவம் சிறந்ததா? அல்லது வைணவம் சிறந்ததா? என்று பட்டி மன்றம் நடத்துவதைப் பார்க்கிறோம். அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புவது எல்லாம் இதுதான். உங்கள் இரண்டு கண்களில் வலது கண் நல்லதா அல்லது இடது கண் நல்லதா என்ற பிரித்துக் கூறமுடியுமா? என்பதுதான். இரண்டு கண்களும் மனிதனுக்கு அமையப் பெற்று அவைகள் பார்வையை வழங்குவதால் மட்டுமே மனிதர் என்ற பெயர் நிறைவு பெறுகிறது. அது அல்லாமல் ஒன்று இருந்து ஒரு கண் பழுதுபட்டு அல்லது இல்லாமலே இருக்கும் மனிதருக்கு மனிதர் என்ற பெயர் நிறைவு பெறுகிறதா? இல்லை. ஊனமுற்றவர்கள் பட்டியலில் சேர்க்க வேண்டியவராகின்றனர். எனவே ஊனமில்லா ஒப்பில்லா இந்து மதத்தின் இரண்டு கண்களே சைவமும் வைணவமும் ஆகும்.

நம்முடைய செயல்கள் மங்கலமாக இருக்க விரும்புகிறோமே தவிர அமங்கலமாக மாற யாரும் முயல்வது இல்லை. அது போல் நம் செயல்கள் எல்லாம் நிறைவு பெறுவதை விரும்புகிறோமே தவிர குறைகாண யாரும் விரும்புவது இல்லை. ஆம் மங்கலமாக விளங்குவது சைவம், நிறைவாய் மிளிர்வது வைணவம் என்ற உண்மையை நாம் கண்டு தெளிய வேண்டும்.

சை - இளமை

வை - கூர்மை

சைவ மதம் இளமை பொருந்திய மதமென்றும் வைணவமோ நுணுக்கமான கூர்மைபடுகிறது. மனிதர்களுக்கு இளமையும் வேண்டும், புத்திக் கூர்மையும் வேண்டும். அவை வேண்டாம் என்று கூறுபவர்கள் நம்மில் யாரும்இல்லை. அது மட்டுமல்ல நாம் நல்லபடி இவ்வுலகில் வாழ வெப்பமும் குளிர்ச்சியும் சமமாக இருக்கவேண்டும். ஒன்று இருந்து ஒன்று இல்லாமல் இருக்க முடியாது. நம் உடலின் சீதோஷ்ணம் அளவோடு இருக்கவேண்டுமென்றே 98.4 டிகிரி சென்டிகிரேட் என்று வைத்துள்ளனர். இவ்வளவை விட சூடு கூடினாலும் ஆபத்து குறைந்தாலும் ஆபத்து. அதுபோல் நம் உடலில் குளிர் தன்மையும் இருக்கவேண்டும். அதுவும் கூடினாலும் குறைந்தாலும் ஆபத்தாக முடியும். அது போல் நம்மதத்தினுடைய ஆரோக்கியத்தைச் காப்பதே சைவமும் வைணவமும் ஆகும். மாலவன் பள்ளிகொள்வது பாற்கடல். அது குளிர்ச்சி, சங்கரன் நடமாடுவது சுடுகாடு அது சூடு. சூட்டிலே நடக்கும் இறைவனுக்கு குளிர்ச்சியான வில்வ மாலை, குளிரிலே உறையும் இறைவனுக்கே சூடான துளசிமாலை என்று பெரியோர்கள் கண்ட வழிபாட்டுமுறை பொருத்தம் என்பது மட்டுமல்ல விஞ்ஞான ரீதியகவும். கூட நடைமுறைக்கு ஒத்து வரக்கூடியது என்பதையும் நாம் மறக்கமுடியாது.

அதே உயிர்கள் வாழ்வதற்கு உழைத்த உயிர்கள் ஓய்வு பெறுவதற்கும் என்று வந்ததே இர பகல் ஆகும். இதில் ஒன்று ம டும் இருந்து மற்றொன்று இ லாவிட்டாலும் நமது இயக்க

உயர வாழ வந்த நமக்கு நல்லுணர்வும், நற்பாதையும், நன்னடத்தையும் காட்ட வந்ததே இந்து மதமாகும். அந்த மதத்தின் இரண்டு கண்கள்தாம் சைவமும் வைணவமும் ஆகும்.

இவ்வுயரிய கருத்தோடு சைவத்தை வளர்க்க வந்தவர்களே நாயன்மார்களாவார்கள் அது போல் வைணவத்தைப் பரப்ப வந்தவர்களே ஆழ்வார்கள் ஆவார்கள். இவ்விரு பிரிவினரும் இறைவனுக்குத் தொண்டு முதலாவது, மக்களை நல் வழிப்படுத்துதல் இரண்டாவது என்ற கோட்பாடுடன் இருந்தார்கள். உன் வழி உனக்கு, என்வழி எனக்கு என்று அவர்கள் இருந்திருக்கலாமே தவிர இருபாலாரும் என் மதம் சிறந்தது, அல்லது என் தெய்வம் உயர்ந்தது என்று வாதிட்டுக்கொள்ளவில்லை. நாட்டை ஆண்ட அரசர்கள் கூட அவர் காலத்தில் சைவத்துக்கும் வைணவத்துக்கும், பெரிய ஆலயங்களை எழுப்பி மக்களைக் காணச் செய்து இரண்டு சமயங்களையும் சரிசமமாக வளர்த்தார்கள் என்றுதான் நாம் சரித்திரங்களிலே காணமுடிகிறதே தவிர வேற்றுமையே எங்கும் தலைதூக்க வில்லை. எனவே ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைத் தொண்டுடன் மக்களுக்கு சிறந்த வழிகாட்டிகளாக விளிர்ந்தனர் என்பது உண்மை. இரண்டு பாதைகள் ஓர் ஊரைச் சென்று அடைவது போல ஒரே பரம்பொருளிடம் நம்மைச் சேர்ப்பிக்கும் இரண்டு கண்கள் சைவமும் வைணவமும் ஆகும் என்பதை அறிவோமாக.



சிவபெருமானுடைய அஷ்டோத்திர அர்ச்சனையில் இடம் பெறும் விஷ்ணு நாமங்களைப் பாரீர்.

ஓம் விஷ்ணு வல்லபாயை நம
ஓம் பக்த வத்சல்யாயை நம
ஓம் ஹிரண்யரே தஸே நம
ஓம் கிரீ ஸாய நம
ஓம் கிரிப்ரியாய நம
ஓம் தக்ஷாத்வரஹராய நம

மகாவிஷ்ணுவினுடைய அஷ்டோத்திர அர்ச்சனையில் இடம் பெறும் சிவ நாமங்களைப் பாரீர்.

ஓம் ஈஸ்வராய நம
ஓம் ஸ்வயம்புவே நம
ஓம் ருஷீகேஸாய நம
ஓம் ஈஸாயாய நம
ஓம் ஸர்வேஸ்வராய நம
ஓம் ருத்ராய நம
ஓம் குஹாய நம

இப்படி இன்னும் பல நாமங்களையும் நாம் காண முடியும். இதை வைத்து நாம் காண வேண்டியது தெய்வங்களுக்குள்ளும் வேறுபாடு இல்லை. அத்தெய்வங்களை ஆராதிக்கும் மந்திரங்களுக்குள்ளும் வேறுபாடு இல்லை. வேறுபாடெல்லாம் நம் மனதிற்குள் மட்டுமே.

இராம காதையில் இராமபிரான் பல இடங்களில் சிவபூஜை

செய்யும் காட்சியும், அர்ச்சு னனை கைலாயத்திற்கு சிவபெ ருமானிடம் அழைத்துச் சென்ற நிகழ்ச்சியும் உண்டு. அதே போல இன்றும் காசி க்ஷேத்

திரத்தில் மரணமடையும் மாந்த ரது செவிகளில் காசி விசுவநா தர் உபதேசிப்பது ராமா என் னும் தாரக மந்திரத்தையே என் பதும் உண்மை. எங்கே சைவ, வைணவ பேதம் இருக்கிறது என்பதைக் காட்ட முடியுமா?

சிவபெருமானுக்கு நான்கு சக் திகள் உண்டு. 1. புருஷ சக்தி. 2. அருள் சக்தி. 3. கோப சக்தி. 4. போர் சக்தி என்பதே அவைகள் ஆகும்.

புருஷசக்தி - மகாவிஷ்ணு

அருள்சக்தி - பார்வதி(உமைய வள்)

கோபசக்தி - துர்க்கை

போர்சக்தி - காளி

இதன்படி பார்த்தாலும் திரு மாலும் சிவனாரும் இணைந்து நின்றருளும் பொதுத்தெய்வ மாக விளங்குவதைக் காணலாம். இன்றைய தினம் பல சிவன் ஆலயங்களில் விஷ்ணு அல் லது கண்ணபிரானுக்கு சன் னதிகளும், அதுபோல் விஷ்ணு ஆலயங்களில் சிவபெருமான் சன்னதிகளும் விளங்கக் காண கிறோம். சென்னையில் தியா கராயநகரில் உள்ல ஒரு ஆல யத்தில் எல்லாக் கடவுள்களுக் கும் தனித்தனி சன்னதிகள் உள் ளன, நவக்கிரக விக்கிரகங்களு டன். ஆனால் எல்லாவற்றுக் கும் மேலாய் சைவ வைணவ ஒற்றுமைக்குச் சிகரமாய் விளங்

குவது சிதம்பரம் ஆகும் ஆம் ஒரே இடத்தில் இருந்தபடி நின்ற இடத்திலிருந்தே வடபுரம் பார்த்து சபாநாயகரான நட ராஜப் பெருமானையும் மேற்கு புறம்பார்த்து பாற்கடல் பள்ளி கொண்ட பரந்தாமனையும் தரி சித்து மகிழும் அமைப்பு வேறு எங்குள்ளது! இது நமது சைவ வைணவ ஒற்றுமைக்கு வாய்த்த பெரிய எடுத்துக்காட்டுதானே.

ஆழ்வார்கள், நாயன்மார்கள், சித்தர்கள், முனிவர்கள், மகான் கள், அடியார்கள், எத்தனையோ புண்ணியசீலர்கள் தோன்றி தங் களுக்குத் தெரிந்த நெறிகளை யும் பாதைகளையும் காட்டிச் சென்றனர். அவர்கள் அனைவ ரையும் விட பதினைந்தாம் நூற் றூண்டில் அவதரித்த ஸ்ரீஅரு ணகிரிநாதர் ஒருவரே சைவ வைணவ ஒற்றுமையை நிலை நாட்டியவர் என்று கூறினால் அது மிகையாகாது. ஸ்ரீஅருண கிரிநாதர் திருப்புகழில் பலப் பல பாடல்களில், அரிமுகுந்தன் மருகோனே, கேசவன் மருகா, மால் மருகா, ராமபிரான் மகி ழும் முருகா என்று பல இடங் களில் அழைக்கிறார். அது மட்டுமல்ல அவரது திருப்பு கழில், இராமாயண நிகழ்ச்சி உண்டு, பாரதக் கதை உண்டு. பிரகலாதன் பெருமை உண்டு, சிவன் முப்புரம் எரித்த வரலாறு உண்டு, காளியின் குணங்களும் உண்டு, எல்லாத் தெய்வத்து திகளும் உண்டு. பேய்களை யும் பூத கணங்களையும் கூட அவர் வர்ணித்திருக்கிறார் என் றால் என்னே அவரது சமதர்ம நோக்கு, என்னே அவர் காட் டிய பக்தியின் பண்பு என்று நமக்கு வியப்பளிக்கும்.



அது மட்டுமல்ல அவரது பாடல்களின் முடிவு பெருமாளே! என்றுதான் இருக்கும். முருகப் பெருமானை அடையாளம் காட்டுவதாக இருந்தாலும், பலரும் பெருமாள் என்றால் திருமால் தானே வேங்கடவன்தானே என்று நினைக்கும் நிலையையும் பக்குவமாய் அவர் பாடல்களில் பரிணமிக்கிறது என்றால் இதைவிடப் பெருஞ்சான்று வேண்டுமா? மருப்புகழ் இல்லா திருப்புகழ் சந்தக் கவிகளாக அமைந்தவிதம் அவர் கொண்ட உயரிய உண்மையான, சமநிலை தெய்வ வழிபாடே காரணம் என்பதை நமக்கு உள்ளங்கை நெல்லிக் கனி போல தெளிவாக்குகிறது மண்ணில் வந்த மகான்கள் எல்லாம் நமக்கு குருவாய் இருந்து வழிகாட்டியவர்களே. அவர்கள் காட்டிய பாதையை நாம் பற்றிச் செல்வது கடமையாகும். இந்து மதத்தின் இரண்டு கண்களே சைவமும் வைணவமும் ஆகும் என்பதறிந்து இவ்விரண்டு சமயங்களுக்கும் ஊறு ஏற்படாமல் கட்டிக் காப்பதும் நமது பெருங்கடமை என்பதை அனைவரும் அறிய வேண்டும்.

இறுதியாக நாட்டுப்புற பழமொழி ஒன்று நம் நினைவுக்கு வருகிறது. "அரியும் சிவனும் ஒண்ணு அறியாதவன் வாயிலே மண்ணு" என்பதாகும். இதனை உணர்ந்து நமது இரண்டு கண்களான சைவத்தையும் வைணவத்தையும் காப்போம் என்ற உறுதிமொழியினை நமக்குள் கொண்டு செயல்படுவோம்; வளம் பெறுவோம்.



### தி. தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலே,

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 „ 6-00 „ —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 „ 6-30 „ —சுத்தி—முதல்மணி
6-30 „ 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ —சுத்தி, 2-வது மணி
12-00 „ 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ —சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 „ 9-30 „ —சுத்தி, ஏகாந்தசேவை

### வெள்ளிக்கிழமைகளில்

காலே

9-00 „ 10-00 „ —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 „ 10-00 „ —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|
| (அ) பொங்கல் „ | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை „ | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் „ | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் „ | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் „ | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை „ | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் „ | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா „ | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

# "ஆராதனை என் அறியாமை ஒன்றுமே"

திரு. பே.சா. கர்ணசேகரன் - கோவை.

அறியாமையில் கட்டுண்டு கிடக்கும் உயிர்களைத் தன்னைப் போலாக்கவே இறைவன் அவற்றிற்குத் தனுகரண புவன போகங்களை வழங்கியுள்ளான். எனவே இப்புவியில் உள்ள பொருட்களெல்லாம் அவன் நமக்குத் தந்தவை. அவன் தந்ததால் அவை அவனுக்கே உடைமையானவை.

இப்படி எல்லாப் பொருட்களுக்கும் உடைமையாளனாக இருப்பதாலேயே அவனை 'ஸ்வாமி' என்று அழைத்தனர். அதைத் தமிழில் 'உடையவன்' என்பர்.

"உடையாய் போற்றி"

(-மாணிக்கவாசகர், திருவாசகம்,
போற்றித் திருவகவல், 120)

"எல்லா வுலகும், உடைய
ஒரு மூர்த்தி"

(-நம்மாழ்வார், திருவாய்மொழி: 5-8-4)

"உடையாளை"

(-அபிராமி பட்டர்,
அபாராமி அந்தாதி, 84)

இறைவன் எல்லாப் பொருட்களுக்கும் உடைமையாளன் என்றால், நாம் அவனுக்குச் சமர்ப்பிக்கும் மலர், கனி முதலிய நிவேதனப் பொருட்களும் அவனுக்குடைமையானவைதான்.

ஆக, இறைவனுக்கு உடைமையான பொருளை எடுத்து இறைவனுக்கே திரும்ப நாம் நிவேதனமாக சமர்ப்பிக்கிறோம் என்பது தெளிவாகிறது.

ஆனால் உலக வழக்கில் ஒருவருக்கு ஒரு பொருளை பரிசாக வழங்கும் போது, அவரிடமுள்ள - அவருக்குடைமையான பொருள் ஒன்றை எடுத்து அவருக்கே திரும்ப நாம் பரிசாக வழங்குவதில்லை.

மாறாக, அவரிடம் இல்லாததும் நமக்கு உடைமையானதுமான ஒரு பொருளைத் தேர்ந்தெடுத்து, அதையே அவருக்கு வழங்குவோம்.



இந்த உலக வழக்கைப் பின் பற்றி இறைவனிடம் இல்லாத தும், நமக்கே உடைமையான துமான ஒரு பொருளைத் தேர்ந் தெடுத்து, அதை அவனுக்கே நாம் நிவேதனமாகச் சமர்ப் பிக்க முடியாதா? முடியும்.

இதற்கு, முதலில் இறைவனி டம் இல்லாத பொருள் எது என்பதை நாம் காணவேண்டும்.

இறைவன், உலகிலுள்ள பொருட்களுக்கெல்லாம் உடை மையாளன் என்று கண்டோம். அப்படிப்பட்ட அவனிடம் கூட இல்லாத பொருள் ஒன்று. உண்டு. அது எது?

இறைவன் அறியாமை சற் றுமற்றவன். எனவே அவன் தூய அறிவாளனாக - அறிவு சொரூபமானவனாக விளங்குகி றான். 'தூய அறிவாளன்' என்ற பொருள்படவே அவனைக் குறித்தனர் நம் முன்னோர்.

"கற்றதனா லாய பயனென்
கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"
[-திருக்குறள், 2]

"சுத்த அறிவே சிவம்" என்று கூறும்
"சுருதிகள் கேளீரோ"
[-மகாகவி பாரதியார்]

ஆக, இறைவனிடம் இல்லா தது அறியாமை ஒன்றே என்றே என்பது புலனாகிறது.

ஆக, இறைவனிடம் இல் லாத பொருள் அறியாமை என்று கண்டறிந்த நாம், அடுத் துக் காணவேண்டியது அவ்வறியாமை நம்முடையதா? நமக்கே உடைமையானதா? என் பதேயாகும்.

உயிர்கள் அறிவுப் பொருட்க ளாயினும் அவற்றின் அறிவுடன் அறியாமை கலந்தே இருக்கி றது.

நேற்று வரைக்கும் பூமி தட் டையாக இருப்பதாக மனிதன் நினைத்து வந்தான். இன்று பூமி உருண்டையாக இருக்கி றது என்று அறிகிறான். நேற் றைய அறிவை இன்றைய அறிவோடு ஒத்துப் பார்க்கும் போது நேற்றிருந்தது அறி யாமை என்று தெரிகிறது. இன்றைய அறிவை நாளைக்கு கிடைக்கப் போகும் அறிவோடு ஒத்துப் பார்க்கும் போது இன் றைய அறிவும் அறியாமைதான் என்று விளங்கும். இதையே திருவள்ளுவர்,

"அறிதோறு அறியாமை
கண்டற்றால்"
[திருக்குறள், 1110]

என்று மொழிந்தார்.

சாதாரண மனிதர்களாகிய நம்மை விட அறிவிற் சிறந்தவர் கள் விஞ்ஞானிகள். அப்படிப் பட்ட விஞ்ஞானியான ஐன்ஸ் டீனே,

நாம் அறிந்த உலகத்தின் எல்- லையில் நின்று கொண்டு, அறி- யாத உலகத்தை எட்டிப் பார்க்- கும் போது, அதன்பிரம்மாண்ட- மும், அகண்டமும் நம்மைத் திணை- றடிக்கிறது. நமது அறியாமையை நினைக்கும் போதே குடல் பத- றுகிறது"

என்று கூறுகிறார் என்றால், நம் முடைய அறியாமையைப் பற்றி நாம் சொல்லவும் வேண்டுமோ?

இப்படிப்பட்ட அறியாமை கலந்த மனித அறிவையே 'சிற் றறிவு' என்றனர். இந்த அறி யாமை இறைவன் தந்ததல்ல. அது உயிர்கள் என்று உண்டோ அன்றிலிருந்தே அவற்றுடன் இயல்பாக இருப்பது. இதை,

"அன்றளவி உள்ளொளியோ
டாவியிடையடங்கி
இன்றளவும் நின்ற திருள்"
[-திருவருட்பயன், 4]
[-இருள்-அறியாமை அல்லது
ஆணவமலம்]

என்பதால் அறியலாம்.

ஆக, உயிர்களுக்கு எவரும் தாராமல் அவற்றிடம் இயல் பாகவே இருப்பது அறியாமை ஒன்றே என்பது புலனாகிறது. உயிர்களின் உடனிருக்கும் அவ் வறியாமையே அவற்றின் உண் மையான உடைமையுமாகும்.

இறைவனிடம் இல்லாதது அறியாமை ஒன்றே என்று கண் டோம். அவ்வறியாமையே நம் மிடமிருப்பது - நமக்கே உடை மையானது என்றும் கண்டோம். எனவே, அவ்வறியாமை தான் நாம் இறைவனுக்குச் சமர்ப்பிப் பதற்குரிய நிவேதனப் பொருள் என்று தெளியலாம்.

இதைக் கம்பர்,

"நாராயணாய நம என்னும்
நன்னெஞ்சர்
பாராளும் பாதம் பணிந்
தேத்துமாறு அறியேன்
காராளும் மேனிக் கருணாகர
மூர்த்திக்கு
ஆராதனை என்அறியாமை
ஒன்றுமே"

என்று பாடுகிறார்.

இதையே தாயுமான சுவாமி கள்,

"வெள்ளக் கருணை மதவேழம்
ஆம்நின் அருட்குஎன்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே"
[-பராபரக்கண்ணி, 109]

என்று வேறு வகையாகக் கூறுகிறார்.

அறியாமையுள்ள இடத்திலேயே பொய், பொறாமை, பகைமை, காழ்ப்பு முதலிய தீய தன்மைகள் இருக்கும். இத்தீய தன்மைகளால் உருவாகும் கருத்துக்கள் கள்ளக் கருத்துக்களாகத்தானே இருக்கும்?

இறைவன் அறியாமை அற்றவன். எனவே அவனிடம் கள்ளக் கருத்தில்லை. மாறாக, அவனிடம் அருளே நிறைந்து விளங்குகிறது.

உயிர்களோ அறியாமை நிறைந்தவை. எனவே அவற்றிடம் கள்ளக்கருத்துக்கள் இருக்கும். 'நான் அறியாமை உடையவன். எனவே என்னிடம் கள்ளக் கருத்துண்டு. அக்கருத்தை இறைவா உனக்கு நிவேதனமாக்குகிறேன்' என்கிறார் தாயுமான சுவாமிகள்.

இப்படி, இறைவனுக்கு நாம் சமர்ப்பிக்கும் பொருளைப்பற்றி, நாம் ஆராய்ந்தது போல், இறைவன் தனக்குச் சமர்ப்பிக்கப்படும் பொருளைப் பற்றி ஆராய்வதில்லை.

ஆம்! அவன் தனக்குச் சமர்ப்பிக்கப் படும் பொருள், உயர்ந்ததா-அற்பமானதா? சிறியதா-பெரியதா; தன்னுடையதா-சமர்ப்பிப்பவருடையதா என்றெல்லாம் பார்ப்பதில்லை.

மாறாக, அது அன்போடு சமர்ப்பிக்கப்படுகிறதா? என்றே பார்க்கிறான். இதை, கண்ணப்பநாயனார், சாக்கிய நாயனார், குகப் பெருமாள், சபரி அன்னை முதலியவர்களின் வரலாறுகள் உணர்த்துகின்றன.

நாம் அன்போடு சமர்ப்பிக்கும் பொருள் அற்பமானதாயினும் அதை இறைவன் ஏற்றுக்

# நித்ய அபிஷேக ஸேவை

**யா**த்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி", எனும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி. மீ. தொலைவில் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகிறது.

# விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

கொள்வதற்குக் காரணம் அவனது பெருங்கருணையே ஆகும்.

நாம், அன்போடு சமர்ப்பித்தால் அற்பமானதாகிய அறியாமையை இறைவன் ஏற்றுக் கொள்வான். அப்படி அவன் ஏற்றுக் கொள்வதற்குக் காரணம், அவன் பெருங் கருணை உடையவனாக இருப்பதே என்பதை,

'கருணாகர மூர்த்தி'
'கருணைமத வேழம்'

என்று அவனைக் குறிப்பிடுவதன் மூலம் உணர்த்திவிடுகின்றனர் கம்பரும் தாயுமானவரும்.

நாம், நம் அறியாமையை இறைவனுக்கு நிவேதனஞ் செய்ய, அதை அவன் ஏற்றுக் கொள்வதால் நமக்கென்ன பயன்? என்று கேட்கலாம்.

அறியாமையை அழிக்க முடியாது; அடக்கவே முடியும். அப்படி அடக்குவதும் நம்மால் முடியாது. இறைவனால்தான் முடியும். இதை விளக்குவது தான் கந்தபுராணத்தில் வரும், 'முருகப் பெருமான் ஆட்டை அடக்கி அதை வாகனமாகக் கொண்ட கதை'.

எனவே நம் அறியாமையை இறைவனிடம் ஒப்படைக்க அதை அவன் அடக்குவான். அறியாமை அடங்கும் போதே நம்முள் இருக்கும் ஞானம் வெளிப்படும். அந்த ஞானத்தால் நாம் இறைவனை அடையலாம்.

ஆக, இறைவனை அடைவதாகிய மனிதப் பிறவியின் நோக்கமும், மனிதனை தன்னைப்போலாக்க வேண்டும் என்ற இறைவனின் நோக்கமும் நாம் நம் அறியாமையை இறைவனுக்குச் சமர்ப்பிப்பதன் மூலம் நிறைவேறும் எனலாம்.

நாம் சமர்ப்பிக்கும் அறியாமை அசுத்தமானது. அதை இறைவன் ஏற்றுக் கொள்வதால் அவனுடைய பேரறிவை சுத்த அறிவை, சிற்றறிவாகவோ அசுத்த அறிவாகவோ ஆக்காதா? என்று கேட்கலாம்.

கடலைச் சென்றடையும் சாக்கடை எப்படி அக்கடலை மாசாக்குவதில்லையோ அப்படி இறைவனைச் சென்றடையும் நம் அறியாமையும் அவனுடைய பேரறிவை சுத்த அறிவை, சிற்றறிவாகவோ அசுத்த அறிவாகவோ ஆக்காது.

உயிரைப் போக்கும் கொடுந்தன்மை உடையது நஞ்சு. அத்தகைய அது, இறைவனை அடைந்த போது தன் தன்மையினின்று மாறி அவ்இறைவனுக்கு அணியாகி விளங்குகிறது.

"விடமும் வந்து ஈசன் கோல
மிடற்றினில் நீலவண்ண
வடிவு பெற்றணிய தாகி
வயங்கிற்றுப் பெரிதும் என்றால்,
கொடியரும் பெருமை யோரைக்
கூடின் வெங் கோதுநீங்கி
ஒடிவறு நலம்பெற் றுய்தல்
உரைப்பதென் உலகின் அம்மா!"

(-சூளாமணி)

இறைவனை அடைந்த அக்கொடிய நஞ்சு எப்படி அவ்விறைவனுக்கு எவ்விதமான துன்பத்தையும் ஏற்படுத்தவில்லையோ அப்படி நாம் சமர்ப்பிக்கும் அறியாமையும் அவனுக்கு எவ்விதமான மாசையும் ஏற்படுத்தாது.



# திருமாலின் உறங்கும் நிலை

டாக்டர் ஜா. மனுவேல - ஆமுதாலா.

உலகிலுள்ள பெரும்பாலான மக்கள் தினமும் ஏதாவது ஒரு செயலில் ஈடுபட்டுக் கொண்டிருப்பர். அந்நேரம் அத்தொழிற் சம்பந்தமாகவோ, தொடர்பில்லாமலோ பல இடர்ப்பாடுகள் ஏற்படுவதுண்டு. தொழிலை மேற்கொண்ட வேகத்தில், இடர்ப்பாடுகளைச் சந்திக்கும் திடமான இதயத்தைப் பெறவில்லை மனிதர்கள் என்றே சொல்லலாம். சற்று இடர்ப்பாடுகள் நேரிட்டாலும் பலரது மனம் தாங்கிக் கொள்வதில்லை. சிலர் உடனே சோர்வடைந்து விடுகின்றுர்கள். இத்தகைய நிலையில்தான் மனிதனுக்கு இறை வழிபாடு தேவைப்படுகிறது. இறைவழிபாட்டைச் செயல்களில் காட்டும் போது ஆலயவழிபாடும், விக்கிரக வழிபாடும் தோற்றம் கொள்கின்றன.

ஆலயங்களில் உள்ள தெய்வத்திருமேனிகளில் மூன்று வகையான நிலைகளைக் காணலாம். அவை 1.சலம் 2.அசலம் 3.சலாசலம் போன்றவையாகும். 'சலம்' என்பது அசையும் தன்மை வாய்ந்தது ஆகும். 'அசலம்' என்பது அசையாத தன்மையைப்பெற்றது என்பதாகும். 'சலர்சலம்' என்பது அசையும் தன்மைகளையும், அசையாத தன்மைகளையும் பெற்றதும் ஆகும்.

அசையாத தன்மைகளைக் கொண்ட உருவங்களை 'துருவ பேரங்கள்' அல்லது 'மூல விக்கிரகங்கள்' என்று சொல்வர். இந்த மூலத்தான திருமேனிகள் கல்லினாலும், உலோகத்தினாலும், மரத்தாலும் ஆனவை. இவைகள் அனைத்தும் நிலைபேறுடையத் தன்மைகள் கொண்டவை ஆகும். இந்த துருவ பேரங்களில் மூன்று வகையான பாகுபாடுகள் உள்ளன. அவை, 1.நின்றுன் (ஸ்தானக) 2.இருந்தான் (ஆசன) 3. கிடந்தான் (சய்ன) என்பவவைகளாகும். இந்த மூவகைப் பிரிவிலும் திருமாலின் திருமேனிகள் வைணவக் கோயில்களில் காணப்படுகின்றன. இவற்றுள் கிடந்த கோல வடிவில் அமைந்துள்ள திருமால் பற்றிய செய்திகளை எடுத்தியம்புவது இக்கட்டுரையாகும்.

## திருமால் வழிபாடு

திருமால் வழிபாடு தமிழகத்திலும், ஆந்திரத்திலும் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. திருமாலை முழு முதற்கடவுளாகக் கொண்டு வழிபடுவோர்கள் 'வைணவச் சமயத்தவர்கள்.' ஆவார்கள். 'விஷ்ணு' என்பதன் பொருள் "எங்கும் வியாபித்து இருப்பது" என்பதாகும்.

"மாயோன் மேய காடுரை
உலகமும்"

என்ற தொல்காப்பியர் கூற்றில் மட்டுமல்லாது சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம், மணிமேகலைப் போன்ற காப்பியங்களிலும் பிற்காலத்தில் எழுந்த பக்தி இலக்கியங்களிலும், கல்வெட்டுக்கள், செப்பேடுகள் போன்றவற்றிலும் திருமால் வழிபாடு இருந்தன என்பதற்குரிய ஆதாரங்கள் இன்றளவும் அழிய முடியாத ஆதாரங்களாய் விளங்குகின்றன. திருமால் கோயில்களில் நிற்றல்,



இருத்தல், கிடத்தல் என்ற மூன்று வகைத் திருக்கோல நிலைகளில் சிறப்பிடம் பெறு கிறுர். 108 திவ்ய தேசங்கள் என அழைக்கப்படும் வைண வத் திருத்தலங்களில் திருமா லின் திருமேனிகள் மேற்கூறிய இந்த மூன்று நிலைகளில்தான் அமைந்திருக்கும். எனினும் கிடந்த கோலத்திருக்கும் நிலை திரு மாலுக்கும் மட்டுமே உரி யதாகும்.

கிடந்த திருக்கோலம் (அல்லது) உறங்கும் நிலை

'கிடந்த கோலம்' என்பது திரு மால் பாம்பினைப் படுக்கையா கக் கொண்டு உறங்கும் நிலை என்பதாகும். வைணவக் கோட் பாட்டிற்கு அடிப்படை வேதங் களாகும். வேதங்களிலும், உப நிடதங்களிலும் உருவ வழி பாடு இடம்பெறவில்லை என் பதை அறிதல் வேண்டும். எனவே இந்த வேதங்கள், உபநி டதங்கள் கூருத ஒரு செய்தியை கி.மு.4 அல்லது கி.மு. 5ம் நூற் ருண்டில் எழுந்த 'பாரதம்' தான் எடுத்தியம்புகின்றது. அதாவது தேவர்களும், அசுரர்களும் திருப் பாற்கடல் கடைந்த கதையை யும் திருமால் கிடந்த கோல வடிவில் உள்ள நிலையையும் கூறுகின்றது. எனவே திருமா லின் கிடந்த கோல நிலை பார தம் எழுந்த காலக் கட்டத்தில் தோன்றி யிருக்கக் கூடுமென் பது புலனாகின்றது. இறை வன் உறங்கிக் கொண்டிருந் தாலும் அல்லது அறிதுயில் நிலையில் இருந்தாலும் உல கத்து உயிர்களைக் காக்கும் பொருட்டு இயங்கிக் கொண் டிருக்கின்ருன் என்பதே இந்தக் கோல நிலையின் தத்துவம். இந்த நிலைக்குப் புத்தர் பெரு மானின் பரி நிர்வாண நிலை யும் ஒரு முன்னோடியாக இருக் கக் கூடுமென்று எண்ண இட மளிக்கிறது.

அமைப்பு:

திருமால் ஐந்து தலைக ளைக் கொண்ட ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டு, நான்கு கைகளோடு உந்தியில் தாமரை மலர் மீது பிரம மன் அமர்ந்திருக்கும் உரு வம் பொதுவான நிலையாகும். கிடந்த கோல நிலையில் உந்தி யில் பிரம்மன் தோன்றுதலைப் பெரும்பாணுற்றுப்படை,

"நீனிற உருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முகன் ஒருவன் பயந்த நல்லிதழ்
தாமரைப் பொகுட்டின் காண் வரத்தோன்றி"

என எடுத்துரைக்கின்றது. அதுமட்டுமின்றிப் பண்டைக் காலத்தில் திருமாலுடைய பள்ளி கொண்ட திருமேனியில் உந்தியில் பிரம்மன் காணப்ப டுவதில்லை என்றதொரு கருத் தையும் இங்கு ஒப்பு நோக்க வேண்டும்.

பரிபாடல்

சங்க இலக்கிய எட்டுத் தொகை நூல்களில் ஒன்ருன பரிபாடல் திருமாலைப் பற்றி ஆறு பாடல்களில் எடுத்துரைக் கின்றது. அதாவது,

"ஆயிரம் விரிந்த அணங்குடை அருந்தலை
தீ உமிழ் திறலொடு முழுமிசை அணவர"

என்று கிடந்த கோல நிலை யினைப் பரிபாடல் எடுத்தியம் புகின்றது.

"அணங்குடை அருந்தலை ஆயிரம் விரித்த
கணங்கொள் சுற்றத்து அண்ணலை வணங்கி"

என்று பரிபாடல் திரட் டும் திருமாலின் பள்ளிகொண்ட உறங்குநிலைக் கோலத்தை விளக்குகின்றன.

சிலப்பதிகாரம்

ஐம்பெருங்காப்பியங்களில ஒன்ருன சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் மாங்காட்டு மறையோன் மூலம் திருமாலின் சிறப்பை எடுத்ததுரைக்கின்ருர். மாங்காட்டு மறையோன் கோவ லனிடம் திருமாலின் உறங்கு நிலை கோலத்தை வருணிக் கின்ருன். அதாவது நீலமே கம் பொன்மலைமீது பக்கங் களில் விரிந்து படிந்திருத்தல் போல படம் விரிந்த ஆயிரம் தலை கொண்ட அனந்த சயனத் தில், பக்தர்கள் பாடிப் பரவசத் துடன் தொழுகின்ற வகையில், பள்ளி கொண்டிருக்கும் நிலை யினை,

"நீலமேகம் நெடும் பொற்குன்றத்துப்
பால் விரிந்தகலாது படிந்தது போல
ஆயிரம் விரிந்தெழு தலையுடைய அருந்திறற்
பாயற் பள்ளிப் பலர் தொழுதேத்த"

என்ற பகுதி எடுத்துரைக்கின் றது.

இவவாறு திருமாலின பளளி கொணட கோல நிலையை இலககியஙகள எடுதது இயம புகினறன

மகாபலிபுரம, ஐஹெவோனே, பாதாமி, ஹலபீடு, காரகல, ஸ்ரீரஙகபபடடினம, ஹமபி, திருவனநதபுரம போனற இடஙகளில திருமால கிடநத கோலத்தில அமைநதிருககும நிலை காணபபடுகினறது 108 திவ்விய தேசஙகளான வைணவத்திருத தலஙகளில 27 இடஙகளில திருமாலின திருமேனி கிடநத கோல நிலையில அமைககப படடுளளது இநத27 இடஙகளிலும திருவரஙகம, திருவனநதபுரம, திருககடலமலலை திருவளளூர, திருஆதனூர ஆகிய தலஙகள தொனமை வாயநதது. தமிழ இலககியஙகளில சிறபபிடம பெறறும விளஙகுகினறன

திருவரஙகம:

சைவரகளுக்குக கோயில எனில "சிதமபரம" எனபது போல வைணவர்களுககுக கோயில "திருவரஙகம" ஆகும. இததலம் திருசசிக்கு அருகில் உளள ஸ்ரீரஙகம் என்பதாகும். இநத இடததில திருமால பளளி கொணட கோலத்தில காடசி தருகினறார இஙகு இவருக்கு "அரங்கநாதன" எனபது பெயர். மேலும நமபெருமாள, பெரிய பெருமாள் எனறும் சிறபபிக்கப் படுகிறார் இநதக் கோலததின் சிறபபு இறைவன துயிலகின்ற நிலையில் இருநதாலும செயல படடுக கொணடிருககிறான எனபதே ஆகும

"விரிதிரைக காவிரி வியன
பெருந துருததித்
திரு அமர மார்பன கிடந்த
வணணமும" கினறார

எனச் சிலபபதிகாரம காவிரியும, கொள்ளிடம ஆகிய நதியும இணைகினற இடமான திருவரஙகததில எழுநதருளியுளள திருமால பள்ளி கொணடிருககும கிடநத கோலததை அழகாக வருணிககினறது இததிருவரஙகததில உநதியில பிரமமன இல்லை எனபதால இததலம பழமை வாயநததாகும அது மட்டுமனறி இதனைச "சுயம வியககத்தலம்" எனவும் அழைப்பர ஆழவாரகள பதினமரால் பாடபபெறறது இததலமாகும. ஆழவாரகளில ஒருவரான தொண்டரடிபபொடியாழவார நாலாயிரத் திவ்விய பிரபநதததில,

"குடதிசை முடியை வைததுக்
குணதிசை பாதம நீட்டி
வடதிசை பினபு காட்டித
தெனதிசை இலஙகை நோக்கி
கடலநிறககடவுள எநதை
அரவணைத துயிலு மாகண
உடல எனக்கு உருகுமாலோ
என செய்கேன உலகததீரே"

என்று திருவரங்கததில் பளளி கொணடுள்ள அரங்கநாதனின

"பச்சைமா மலைபோல மேனி
பவளவாய் கமலச் செஙகண
அசசுதா அமரர ஏறே
ஆயரதம கொழுநதே எனனும
இசசுவை தவிர யான போய
இநதிர லோகம ஆளும
அசசுவை பெறினும வேண்டேன
அரஙகமா நகருளானே

எனத திருமாலின அழகினை உளளம உவநது பாடுகினறார இவர இறைவனைப பகதி பரவசத்தினால தமமை மறநத நிலையில பாடியுளளமை மிகவும போறறத தகுநத ஒனறாகும இவர மட்டுமினறி மேலும பததுஆழவாரகளாலும, ஆசாரியரகளாலும பாடப பெற்ற தலம் இததிருவரஙகமாகும

திருமாலின திருககோலஙகளில நிற்றல, இருததல எனற இரண்டுக் கோலஙகள எநதக் கடவுளர்க்கு இருநதாலும, திருமாலுககு மட்டுமே இநத இரணடுடன் கிடநத கோல நிலை அல்லது உறஙகு நிலை எனபது மூனறாவதாக சேரகினறது. இந்த நிலை திருமாலுககு மட்டுமே உரிய நிலையாகும

## சகாயம்

எப்படி ஒரு மரமானது தனனுடைய பழததைத தானே சாபபிடாமல் மற்றவரகளுக்கு அளிக்கிறதோ அது போல மஹாதமாக்களும், சாதுககளும மறறவர்களுககு சகாயம செயவதற்குப் பாடுபடுகிறார்கள்

-பகத கபீரதாஸ

திருமதி கமலா மாரியபபன சேகரிப்பு

# ஆசார்யன்-சீடன்

திரு. டி. கேசவ அய்யங்கார், அல்லூர்.



**முன்னுரை:**

இவ்வுலகிலுள்ள எல்லா மானிடர்களுக்கும், எந்தச் சமயத்தைச் சார்ந்தவரகளாயிருநதாலும், அவர்களுக்கெலலாம் குரு, ஆசார்யன், தலைவன் என்று ஒருவர் கட்டாயமாக இருந்து வருகிறுர் எனபது அனைவரும அறிந்ததேயாகும். ஒரு சிலர "குரு, ஆசார்யன்" என்ற சொல்லைப் பயனபடுத்தாமல், "தலைவன்" என்ற சொல்லினால் மட்டுமே கொண்டாடுகிருரகள் என்பதுவும் நாம அறிநததே யாகும் தெய்வமே இலலை எனக்கூறும் ஒருசிலர்கூட தங்கள் தலைவனை தெய்வமாக எண்ணிப் போறறுகிருரகள் இதனால எந்த வகையான மனிதர்களாக இருந்தாலும், அவர்களுக்கெல்லாம் ஒரு தலைவன் குரு ஆசார்யன், என்று ஏதாவது ஒரு பெயரில் இருக்கிருர்கள் என்பதுதான் முடிவானதாகும்

**வைணவத்தில் ஆசார்யர்**

நம் வைணவ சித்தாந்தத்தில் மட்டுமே இல்லறத்தில் இருப்பவர்களும், துறவிகளும், ஆசார்யராகவும், குருவாகவும் இருக்கிருர்கள். இல்லறத்தில் இருந்துகொண்டு ஆசார்ய, குரு ஸ்தானம் வகிப்பர், "ஆசார்யன்" என்ற பெயரிலேயே குறிப்பிடப் படுகிருர். உதாரணமாக, முதலியாண்டான், திருமணி அப்பன் கோயில் கந்தாடை அண்ணன் பாவனாசார், கொங்கிலாச்சான், நடாதூர் அம்மாள்" முதலானோர் இல்லறத்தில் இருந்து கொண்டு ஆசார்ய ஸ்தானம் வகிப்பவர்கள். துறவிகளாக இருந்து ஆசார்ய ஸ்தானம் வகிப்பவரை, "ஜீயர்" என்ருே "ஆண்டவன் ஸ்வாமி" என்ருே அழைக்கப்படுகிருர்கள். உதாரணமாக, "ஸ்ரீமத் அஹோபிலம் மடம் ஜீயர், ஸ்ரீமத் வானமாமலை ஜீயர்", ஸ்ரீரங்க நாராயண ஜீயர் பெரிய ஆஸ்ரமம் ஸ்ரீமத ஆண்டவன் ஸ்வாமிகள், பௌண்டரீகம்புரம் ஆண்டவன்" முதலானோர் துறவிகளாக இருந்து கொண்டு ஆசார்ய ஸ்தானம் வகிப்பவர்கள்.

ஸ்ரீவைணவ சித்தாந்தத்தை எடுத்துக்கொண்டால், இதற்கு "பெரிய பெருமாளே" பிரதம ஆசார்யன் ஆகிருன். அடுத்து பெரிய பிராட்டி சேனை முதலியார் நம்மாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார் முதலானவர்களை பூர்வாசிரியர்கள்

என்று கூறுவதுணடு. இக்க ருததுக்கள் அடங்கிய ஸ்லோ கம்தான் கூரத்தாழ்வான் அரு ளிச்செய்துள்ளது "லக்ஷ்மிநாத ஸமாரம்பாம நாதயாமுனமத் யமாம், அஸ்மதாசார்ய ப்ரயந் தாம் வநதே குருபரம்பராம்".

இது தவிர முதலியாண்டான் அருளிச்செய்துள்ள வாக்ய குரு பரம்பரையும் ஒன்றுண்டு அதாவது "அஸ்மத் குருப்யோ நம அஸ்மத் பரம குருப்யோ நம அஸ்மத் ஸர்வ குருப்யோ நம ஸ்ரீமதே ராமானுஜாய நம ஸ்ரீபாராங்குச தாஸாய நம ஸ்ரீமத் யாமுனமுனயே நம. ஸ்ரீராம மிஸ்ராய நம ஸ்ரீபுண் டரி காக்ஷாய நம ஸ்ரீமத் நாதமுனயே நம ஸ்ரீமதே சட கோபாய நம ஸ்ரீமதே விஷ் வக்ஸேனாய நம ஸ்ரீயை நம. ஸ்ரீதராய நம இதுமட்டுமின்றி முதலியாண்டான் அருளிச் செய்துள்ள ஸ்லோக குருபரம்ப ரையும் ஒன்றுண்டு. அதாவது "அஸ்மத் தேசிகமஸ்மதீய பரமாச் சார்யான், அஸேஷான் குருன் ஸ்ரீமன் லக்ஷ்மண யோகி புங் கவ, ஹாபூர்ணௌ முநிம்யாமு னம், ராமம் பத்ம விலோச னம் முநிவரம், நாதம் ஸடத் வேஷிணம், ஸேநேசம் ஸ்ரிய மிந்திரா ஸகஸ்ரம் நாரா யணம் ஸம்ஸ்ரயே" என்பதா கும். மேலே கூறிய மூன்று குரு பரம்பரை ஸ்லோகங்களை யும், எல்லா ஸ்ரீவைஷ்ணவர்க ளும் தினந்தோறும் காலை யில் அனுசந்தானம் செய்து கொண்டிருக்கிறுர்கள். இங்கு ஸ்வாமி நிகமாந்த மஹாதே சிகன் அருளிச்செய்துள்ள ப்ர பந்தமான "அதிகாரசங்கிரகம் பாசுரம்-3" என்னுயிர் தந்தளித் தவரைச் சரணம் புக்கி, யான டைலேயவர் கருக்கணி வரைவ வணங்கி பின்னருளா பெரும் புதூர் வந்த வள்ளல், பெரி யநம்பியாளவந்தார் மணககால் நம்பி நன்னெறியை யவர்க்கு ரைத்த வுய்யக்கொண்டார் நாத முனி சடகோபன் சேனைநா தன், இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்டு, எம்பெரு மான் திருவடிகளை அடைகின் றேனே", என்று அனுஸந் தேயமாகிறது. எம்பெருமான் தொடக்கமாக இன்று வரை யில் உள்ள ஆசார்யர்கள் வரை ஸம்ப்ரதாய ரகஸ்யார்த்தங்கள் இடைவிடாமல் வந்து சேதனர் களை உஜ்ஜீவிக்கிறது பற்றி மிகப் பழமையான ரஸ கன மான பின்வரும் ஸ்லோகம் கூறு கிறது.

"லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ
சடரிபு:ஜலத:ப்ராப்ய காருண்யநீரம்
நாதாத்ராவப்யஷிஞ்சத்
ததநு ரகுவராம்போஜசக்ஷுர் ஜராப்யாம்
கத்வா தாம் யாமுநாக்யாம் ஸரிதமத
யதீந்த்ராக்ய பத்மாகரேந்த்ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி
ஸததம் தேசிகேந்த்ரப்ரமௌகை:"

இந்த ஸ்லோகத்தின் பொரு ளாவது

ஸ்ரியப்பதியாகிற பெருங்கட லில், நம்மாழ்வாராகிற காள மேகம் படிந்து, கருணையா கிற நீரைப்பருகி, அதை நாத முனிகள் என்கிற மலையுச்சி யில் மழையாகப் பெய்து, அந்த கருணையாகிய மழை உய யக கொண்டார, மணக்கால்நம் பிகளாகிய இரு அருவிகளால் ஸ்ரீஆளவநதார் என்கிற நதியை அடைந்து பிறகு எம்பெருமா னார் என்கிற மிகப்பெரிய ஏரி யில் பாய்ந்து, பின் எழுபத்து நான்கு ஸிமமாசநாதிபதிகளா கிற, எழுபத்து நான்கு மதகுகள் வழியாக, ஸம்ஸார சேதனர்க ளாகிய பயிர்களை உஜ்ஜீவிக் கும்படி இடைவிடாது பெரு கிக் கொண்டிருக்கிறது.

**ஆசார்யனைக் குறிக்கும் சொற்களும் தனிப்பட்ட பொருளும்**

ஆசார்யன், குரு, தேசிகன், உபாத்தியாயர் என்ற சொற்க



ளெல்லாம் பொதுவாக ஒரே கருத்தை தெரிவித்தாலும், ஒவ்வொரு சொல்லுக்கும் சில தனிப்பட்ட பொருள் உண்டு. முதலில் ஆசார்யன் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். ஆசார்யன் என்ற சொல்லானது சாஸ்த்திரார்த்தங்களை நன்கு அறிந்து தானும் நன்கு அனுஷ்டித்து வருபவரும் சீடர்களையும் ஆசார அனுஷ்டானங்களினால், சீலமான ஒழுக்கத்தில் கொண்டு வருபவர் என்று பொருள். இக்கருத்தையே பின் வரும் ஸ்லோகம் தெரிவிக்கிறது.

"ஆசினோதி ஸ ஸாஸ்த்ராணி,
ஆசாரே ஸ்தாபித்யபி
ஸ்வயமாசரதே யஸ்மாத்
ஆசார்ய இத்யபிதீயதே"

குரு என்ற சொல்லில் முதல் எழுத்தாக இருககும் 'கு' என்ற எழுத்தானது அஞ்ஞானமாகிற இருளைக் குறிக்கும். 'ரு' என்ற இரண்டாவது எழுத்தானது, அந்த அஞ்ஞானமாகிற இருளைப் போக்குகிறவர் என்று பொருள். இதுவே குரு என்ற சொல்லுக்குள்ள தனிப்பட்ட பொருளாகும். இனி தேசிகன் என்ற சொல்லைக் கவனிப்போம். எவர் ஒருவர் மோக்ஷோபாயத்தை நன்கு அறிந்து, உபாயானுஷ்டம் செய்வித்து, தானும் எம்பெருமானை பிரபத்தி செய்து, சீடர்களின் மோக்ஷத்திற்கு வழிகாட்டியாக இருப்பவர்கள் என்பது தான், தேசிகன் என்ற சொல்லுக்குள்ள தனிப்பட்ட பொருளாகும். உபாத்தியார் என்ற சொல்லின் பொருள் எல்லோருக்குமே தெரியுமாகையால் விளக்கம் தரப்படவில்லை.

ஜீவாத்மாக்களும் எம்பெருமானும்

சேதனர்களாகிய ஜீவாத்மாக்கள் உஜ்ஜீவிக்க வேணும் என்ற ஒரே காரணத்திற்காக, எம்பெருமான் பத்ரிகாஸ்ரமத்தில் தானே நாராயணனாகவும், நரனாகவும், (ஆசார்யனாகவும் சீடனாகவும்) அவதாரம் செய்து, திருமந்திரமாகிய எட்டெழுத்தை உபதேசித்துப் போனான். தானே ஆசார்யனாகவும் சீடனாகவும் இருக்க வேண்டியிருந்த குறையை, பின்னால் ஆழ்வார்களில் கடைசி ஆழ்வாரான திருமங்கையாழ்வாருக்கு தான் ஆசார்யனாகவும், ஆழ்வாரை சீடனாகவும் வைத்து திருமந்திரோபதேசம் செய்து, போக்கிக் கொண்டான் என்பர் நம் பூர்வாசார்யர்கள்

சமஷ்டி ஆசார்ய வந்தனம்

"குருர்ப்ரும்மா குருர் விஷ்ணு:
குருதேவோ மஹேஸ்வர:
குரு ஸாக்ஷாத் பரம் ப்ரும்மா
தஸ்மை ஸ்ரீகுரவே நம:

என்பது ஒரு ஸ்லோகம்.

இந்த ஸ்லோகத்தை பார்க்கும் போது, இதில் சிவன், விஷ்ணு, ப்ரும்மா ஆகிய மூவருக்கும் உள்ள பேதமின்மையைக் குறிக்கிறது. இந்த ஒரு ஸ்லோகத்தினாலேயே மேலே கூறிய மூவரையும் குருவாக வரித்து வந்தனம் செய்கிறேன் என்பதே ஸ்லோகப்பொருள்.

மானிடப் பிறவியின் உயர்வு:

எத்தனையோ ஜென்மங்களுக்குப் பிறகு நாம் செய்த நல்வினையின் பயனாகவும், எம்பெருமான் க்ருபா கடாக்ஷத்தினாலும், உத்தமமான மானிடப் பிறவி கிடைத்துள்ளது. மானிடப் பிறவிதான் முக்தி அடைய சுலபமான வழி என்றும், வாழ்க்கை எனும் பிறவிக்கடலை நீந்திக் கரை சேர்வதற்கு இந்த மானிட உடலே ஒரு தெப்பம் என்றும் கூறுவர். இங்கு திருவள்ளுவரின்

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்"

என்ற குறட்பாவையும் மனதில் கொள்ள வேண்டியதாகிறது. மானிடப் பிறவிக்குக் கிடைத்துள்ள மிகப்பெரியதொரு சொத்து, "பகுத்தறிவும், ஞானமும்" ஆகும். ஞானம் என்பது வெறும் புத்தகப் படிப்பினாலோ அல்லது தத்துவ ஆராய்ச்சியினாலோ வரக்கூடியதில்லை. ஞானத்தை அடைய ஒருவன் நல்ல சதாசார்யனை அடைந்து அவர் காட்டுகிற வழியில் சென்று அவர் உபதேசப்படி பகவத், பாகவத, ஆசார்ய கைங்கர்யம், எம்பெருமானிடம் பக்தி, ஆசார்ய பக்தி, ப்ரபத்தி செய்து வந்தால் ஞானம் ஏற்பட்டு முக்தி கிடைக்கும். இங்கு ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ள உபதேசரத்தினமாலை[பாசுரம் 61]

"ஞான மனுட்டான மிவை
நன் கவேயுடைய
னானகுருவை அடைந்தக்கால்-
மாநிலத்தீர்
தேனார் கமலத்திருமாமகள் கொழுநன்,
தானே வைகுந்தம் தரும்"

(41-ம் பக்கம் பார்க்க)

# மாறப் பிரானைத் தொழுத மதுர கவியாழ்வார்

'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்று நம் ஈடேற்றம் வேண்டி போற்றற்குரியோரை வரிசைப்படுத்துவர் ஆன்றோர். அவர்களுள் குருவையே எல்லாமாகக் கொண்டு எந்நேரமும் வழிபட்டு உய்ந்தவர் மதுரகவியாழ்வாராவர். அவர், தாம் குருவாக ஏற்றுக்கொண்ட நம்மாழ்வாரையே பெற்ற தாயாகவும், பேணிய தந்தையாகவும், பிறப்பொழிக்கும் தெய்வமாகவும் கருதி போற்றினார். அவருடைய குரு பக்தியின் சிறப்பை அவர் பாடியருளிய பாடல்களின் மூலம் நாம் அறிந்து கொள்ளலாம். அவை யாவும் நம்மாழ்வாரைப் போற்றிப் பரவுகின்றனவே தவிர இறைவனிடம் நேரடியாக அருள் வேண்டுபவையாகவோ, அவன் புகழ் பாடுபவையாகவோ இருக்கக் காணோம். 'குருவின் தாளைப் பற்றினால் அக்குரு பற்றியிருக்கும் இறையின் தாளைத் தானாக சென்றடைவோம்' என்பது மதுரகவியாழ்வாரின் அசைக்கமுடியாத கொள்கையாகும். அக்கொள்கையின் வெற்றியை அவருடைய வாழ்க்கை பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

மதுரகவியாழ்வார் துவாபர யுகத்தில் எட்டு லட்சத்து எண்பத்து மூவாயிரத்து எண்ணூற்று எழுபத்து ஒன்பதாவது வருடமான ஈஸ்வர வருடத்தில் சித்திரை மாதம் பதினைந்தாம் நாள், வெள்ளிக்கிழமை சித்திரை நட்சத்திரத்தில் அவதரித்தாரென கூறுவர் பெரியோர். ஆனால் வரலாற்றாசிரியர்கள், அவர் பன்னிரு ஆழ்வார்களில் காலத்தால் பிற்பட்டவரென்றும், அவருடைய காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டென்றும் உரைக்கின்றனர். அவர் தம்முடைய குருநாதரான நம்மாழ்வாருக்கும் முன்னதாகத் தோன்றி, அவருடைய சம காலத்தவராய் இருந்து, அவருக்குப் பிறகும் வாழ்ந்தவராய் விளங்குகின்றார். குருவிற்கு முன்னரே தோன்றிய அவருடைய அவதாரமானது குருவாகிய நம்மாழ்வாரின் அவதாரத்தோடு ஒப்பிட்டு நோக்க சூரியோதயத்திற்கு முன் தோன்றும் அருணோதயமாக நம் முன்னோர்களால் சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. குமுதர் என்ற பெயருடைய கணநாதரே மதுரகவியாழ்வாராக கருடனின் அம்சத்தோடு அவதரித்ததாகவும் கூறப்பட்டு வருகிறது அவர் தோன்றிய திருத்தலம் பாண்டிய நாட்டில் திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்கருகிலுள்ள திருக்கோளூர் என்பதாகும்.


திரு. வே. சோமசுந்தரம்,
சென்னை—61.


பிராமணர் குலத்தில் தோன்றிய அவருக்கு நான்கு வேதங்களிலும் நல்ல பயிற்சி வாய்த்தது. கல்வியில் சிறப்பெய்தியவர் கவி பாடுவதிலும் வல்லவரானார். அவருடைய அறிவு வளர வளர அரவணையான்பால் எழுந்த அன்பும் அளவிறந்து பெருகலாயிற்று. அவ்வன்பின் பெருக்கால் எம்பெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திருத்தலங்களுக்குச் சென்று சேவிக்க உள்ளத்தில் ஆசை மிகக் கொண்டார். எனவே, முக்தியளிக்கவல்ல அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை ஆகிய ஏழு நகரங்களுக்கும் சென்று ஆங்காங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருவுருவ வழிபாட்டில் ஈடுபட்டார். வழியிலுள்ள பிற புனித தலங்களுக்கும் சென்று தொழுது வந்தார். அவ்வாறு வருகையில் அயோத்தியை அடைந்தார். அங்குள்ள இராமர், சீதாதேவியரின் திருவுருவ அழகில் தம் மனதைப் பறி கொடுத்தார். அங்கிருந்த இராமனின் புகழ் பாடும் அடியார்த் திருக்கூட்டமும் அவரை மிகவும் ஈர்த்தது. இராமபிரானின் அழகை அனுபவிப்பதிலும், அவன் புகழைச் செவி மடுப்பதிலும் மதுரகவியாழ்வாருக்கு அங்கேயே சில காலம் சென்றது.

அவ்வாறிருக்கையில் ஒரு நாள் ஓர் அதிசயம் நிகழக் கண்டார் அவர். வழக்கம் போல திருக்கோளூர் பெருமாளைத் திசை நோக்கி வணங்கக் கருதித் தென்திசையில் பார்த்தவர் ஓர் ஒப்பற்ற பேரொளியைப் பார்த்தார். அப்பேரொளியானது அவரைத் தம்மிருப்பிடம் நாடி வருமாறு அழைப்பது போலிருந்தது. அவரும் அதன் குறிப்புணர்ந்தவராக தென் திசை நோக்கிப் பயணம் மேற்கொள்ளலானார். திருவரங்கத்திற்கும் தெற்கே திருக்குருகூர் வந்து சேர்ந்த போது அப்பேரொளியின் பிறப்பிடமும், இருப்பிடமும் அதுவே எனத் தெளிந்தார். அவ்வூர்ப் பெரியவர்கள் வாயிலாகத் திருப்புளியாழ்வாராகிய புளிய மரத்தின் நிழலில் நம்மாழ்வார் தவம் மேற்கொண்டிருப்பதை பற்றி அறிந்து கொண்டார். உடனே அவரைச் சென்று வணங்கினார். அப்போதே, 'சோதிப் பிழம்பான பெரும்பொருள் இவரே' எனத் தெளிந்தார்.

நம்மாழ்வார் கண்மூடி, வாய் புதைத்து, சிந்தையை ஸ்ரீரங்கநாதனிடம் பறி கொடுத்தவராய் வீற்றிருந்தார். அவருடைய கருத்தைக் கவரும் விதத்தில் அருகிலிருந்த ஒரு கல்லையெடுத்து அவர் முன்னே போட்டார் மதுரகவியாழ்வார். அக்கல் எழுப்பிய ஒலியால் கண் விழித்த நம்மாழ்வார் அவரைப்

# ஜீவ பிருந்தாவனம்

ஒரு சமயம் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளைக் கண்டு வணங்கிட இரு மலையாள ஜோதிடர்கள் வந்து இருந்தார்கள். அப்போது அவர்கள் ஸ்ரீ சுவாமிகளின் ஜாதகத்தைப் பெற்று ஆய்ந்திட முனைந்தார்கள். பின்னர் ஸ்ரீ சுவாமிகளிடம் தங்களுடைய முடிவுகளைக் கூறினார்கள். "ஸ்ரீ சுவாமிகள் ஆயுட் காலம் நூறு ஆண்டுகள்'' என்றார் ஒருவர். "இல்லை. இல்லை. எழு நூறு ஆண்டுகள்'' என்றார் மற்றொருவர். "நீங்கள் இருவர்கள் கூறிய முடிவுகளும் சரியானவைகளே. எனக்குப் பூவுலக வாசம் நூறு ஆண்டுகள். பிருந்தாவன வாசம் எழு நூறு ஆண்டுகள்'' என்றார் ஸ்ரீ சுவாமிகள். மலையாள ஜோதிடர்கள் மலைத்து நின்றார்கள். தக்க சன்மானங்களை வழங்கி ஸ்ரீ சுவாமிகள் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

ஆந்திர மாநிலம் ஆதோனி வட்டம் துங்கபத்ரா நதிக்கரையில் ஸ்ரீசுவாமிகள் தன் பிருந்தாவன வாசத்துக்கு ஒரு சிறந்த இடத்தை தாமே தேர்ந்து எடுத்தார். அதோனி நவாப் ஸ்ரீ சுவாமிகளுக்கு ஒரு கிராமத்தையே தானம் அளித்தார். அதுவே இன்றைய மந்திராலயம். தண்டகாரண்ய வாசத்தின்போது இராமபிரான் ஓய்வு கொள்ள ஒரு கல்லின்மீது அமர்ந்து இருப்பார். அப்புனித கல்லையே ஸ்ரீ சுவாமிகள் பிருந்தாவனம் அமைத்திட எடுத்துக் கொண்டார். மேலும் பெரும் அளவு சாளிக்கிராம கற்களையும் பயன்படுத்திக் கொண்டார். பிருந்தாவனம் அமைந்த இடம் முழுவதுமே ஒரு காலத்தில் மன்னன் பிரகலாதன் அரும் யாகம் புரிந்த யோக பூமி. தமது ஆயுட் காலம் முடிவுறும் தருணத்தில் ஸ்ரீ சுவாமிகள் பிருந்தாவனப் பிரவேசத்துக்கு ஒரு புண்ணிய தினத்தை தீர்மானித்தார்.

அன்று வேத ஒலியும் கீத ஒலியும் முழங்கிடவும் இடையில் அணிந்துள்ள காவி ஆடை தீபஜோதியாய் ஒளி வீசிடவும், பொன் மேனியெங்கும் தாமரைப் பூத்த தடாகமாய் காட்சி அளித்திடவும், கழுத்தில் துளசி மணி மாலைகளும், கையில் கமண்டலமும், நாவில் இராம நாமமும் மந்தகாச வதனமும், சிம்ம நடையும் கொண்டு குருராஜர் - தவராஜர் பிருந்தாவனம் புகுந்தார். கூடியிருந்த மக்கள் பரவச வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தார்கள். இந்த நிகழ்ச்சி கி. பி. 1678ஆம் ஆண்டில் நடைபெற்றது. இப்புனித பிருந்தாவனம் இன்றும் பூரணப் பொலிவுடனும் அபார மகிமையுடனும் விளங்குகிறது. ஆம். இது நம் ஜீவ பிருந்தாவனம்.

—திரு. ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

பார்த்தருளினார். உடனே மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரோடு உரையாடும் ஆவல் மிகுதியினால் "செத்ததின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்று கேட்டார். அதற்கு அவர் மறுமொழியாக, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என்று கூறியருளினார். அதைக்கேட்ட மதுரகவியாழ்வார், "இவரே நம்மை ஈடேற்ற வல்ல குருநாதர்'' என்று துணிந்தார்.

அவருடைய அத்தீர்மானத்திற்குக் காரணம் நம்மாழ்வாரின் அருமையான பதிலேயாகும். மதுரகவியாழ்வார் எழுப்பிய வினாவின் எளிய வடிவமாவது, "அறிவற்ற உடலைச் சேர்ந்த சிறிய ஆன்மாவாகிய உயிரானது எவற்றை அனுபவித்துக்கொண்டு எவ்விடத்தில் உறையும்?'' என்பதாகும். அதற்குப் பதிலாக நம்மாழ்வார் மொழிந்ததின் பொருள், 'உடலைச் சேர்ந்த ஆன்மாவானது அவ்வுடலிலுள்ள ஐம்பொறிகளின் வாயிலாக வரும் ஐம்புலன் உணர்வுகளுக்கு காட்பட்டு இன்ப துன்பங்களை அடைந்து அவ்வுடலிலேயே வீற்றிருக்கும்'' என்பதாகும். அவ்வினா விடையால் நம்முடலைப் பற்றியிருக்கும் ஆன்மா பற்றிய தெள்ளத்தெளிந்த அறிவு நம்மாழ்வாரிடம் நிரம்பியிருந்த தன்மை வெளிப்பட்டது. ஆன்ம அறிவுடைய அவராலேயே அவ்வான்மா ஈடேற்றத்திற்கான வழியையும் காட்ட இயலும் என்பது வெள்ளிடைமலை யல்லவா!

அப்போது முதல், தாம் கொண்டிருந்த ராம பக்தியையும் துறந்தவராய் 'நம்மாழ்வாரே நம்மை யாளும் நாதன்' என்றுபோற்றி வழிபாடியற்றி எல்லாவித கைங்கரியமும் அவருக்குச் செய்து வந்தார் மதுரகவியாழ்வார். குருவானவர் சீடருக்கு அர்த்த பஞ்சகம் என்று சொல்லப்படும் ஐந்து பெரிய உண்மைகளைப்பற்றி உபதேசித்தருளினார். அவையாவன; இறைவனின் தன்மை, உயிர்களின் தன்மை, இறைவனை அடைவதற்கான வழி, அதற்கிடையூறாகும் இன்ப துன்பம், இறைவனை அடைந்துய்தல் என்பனவாகும். அவற்றைக் கேட்ட மதுரகவியாழ்வார் அறிவுச் சுடராம் நம்மாழ்வாரையே இறை நிலையில் வைத்துக் கண்டு அவரால் தாம் உய்வதற்காம் வழியில் செல்லத் தலைப்பட்டார்.

நம்மாழ்வார் வைகுந்தம் செல்வதற்கான நேரம் வந்து சேரவே, இறையருளால் மேலிருந்து வந்த சோதி ஒன்றுடன் அவருடைய திருமேனியினின்றும் வெளிப்போந்த சோதி இரண்டறக் கலந்து விண்ணகம் ஏகியது. அவ்வற்புதக் காட்சியை பக்தி

யுடன் கண்டிருந்த மதுரகவியாழ்வாருக்கு வானவர் மூலமாக நம்மாழ்வாரின் விக்கிரகத் திருமேனியொன்று கிடைத்தது. அதனை புளியமரத்தின் பக்கத்திலேயே நிறுவி, திருக்கோயில் எழுப்பி, நம்மாழ்வாருக்கு நாள்வழி பாடும், சிறப்பு வழிபாடும் செய்து வரலானார். குருநாதரின் விக்கிரகம் திருவீதி பவனி வரவும் ஏற்பாடு செய்தார். அச்சமயங்களில், 'வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்' என்று நம்மாழ்வார் புகழை உரக்கக் கூவி, பல விருதுகளை முழக்குவது அவருடைய வழக்கமாயிருந்தது. அதற்குச் சங்கப்புலவர்கள் சிலர் எதிர்ப்பு தெரிவித்தனர். "நம்மாழ்வார் வேதம் தமிழ் செய்தாரென்பதை வாதிலிறங்கி வென்ற பின்னரே ஒப்புவோம்" என்றனர் அவர்கள். உடனே மதுரகவியாழ்வார், "எங்கள் ஆழ்வார் இயற்றியருளிய திருவாய்மொழி உள்ளது. அப்பனுவலின் பாடலடி ஒன்றினைச் சங்கப்பலகை ஏற்குமானால் எங்கள் ஆழ்வாரின் விருதையும் அங்கீகரித்ததாகும்" என்று கூறி,

"கண்ணன் கழலினை
நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே"

என்ற திருப்பாசுரத்திலிருந்து, 'கண்ணன் கழலிணை' என்னும் துணுக்கை மட்டும் தனியே எடுத்து ஓர் ஓலையில் எழுதிக் கொடுத்தார். அவ்வோலையானது பொற்றாமரைக் குளத்தில் மிதந்திருந்த சங்கப் பலகையில் வைக்கப்பட்டது. அப்போது அப்பலகையில் முன்னூறு புலவர்களும் ஏறியிருந்தனர். அவர்களெல்லாம் பொய்கையில் கவிழ்த்துவிடப்பட நம்மாழ்வாரின் வாய்மொழி எழுதப்பட்ட ஓலை மட்டுமே சங்கப்பலகையில் இடம் பெற்றிருந்தது. ஒருவாறாக நீந்திக்கரை சேர்ந்த புலவர்கள் நம்மாழ்வார் இயற்றியருளிய திவ்யப்ரபந்தங்களின் உயர்வையறிந்து ஒப்புக்கொண்டனர்.

அதன் பிறகு அவர்களும் மதுரகவியாழ்வரோடு சேர்ந்துகொண்டு நம்மாழ்வாரின் விருதுகளை முழங்கி அவரை வழிபடுவாராயினர். இவ்வாறாக நம்மாழ்வாருக்கிருந்த எதிர்ப்புக்களை முறியடித்து அவருடைய புகழை நாடெங்கும் பரவச் செய்தார் மதுரகவியாழ்வார்.

அவருடைய முதிர்ந்த குருபக்தியின் விளைவாக "கண்ணி நுண் சிறுத் தாம்பு" என்ற திவ்யபிரபந்தத்தையும் பாடியருளினார். அவருடைய வாழ்வின் இறுதியல வைகுந்தம் அடைந்து அங்கும் நம்மாழ்வாருக்கே திருத்தொண்டாற்றும்பேறு பெற்றவரானார்.

இனி, மதுரகவியாழ்வாரின் திவ்ய பிரபந்தத்தைப்பற்றிக் காண்போம்.

மதுரகவியாழ்வார், தேனினும் இனிய கவி பாடுவதில் வல்லவர் என்பதை அவருடைய பெயரிலிருந்தே நாம் அறிந்து கொள்ளலாகும். அவர் இயற்றியருளிய "கண்ணி நுண்

# நதிகள் கூறும் வேதாந்த விளக்கம்

மலையில் தோன்றி, வழி நெடுக ஓடிக் கடலில் சங்கமம் ஆகிற நதியை நாம் பலகாலும் கண்டு கொண்டுதானிருக்கிறோம். இந்த நதி எங்கிருந்து வருகிறது என்றால் ஓஹோ இது காவிரி நதியல்லவா? இது சைய மலையிலிருந்து வருகிறது என்று கூறுவோம். இது கங்கையன்றோ? இது இமயமலையில் உற்பத்தியாகிறது என்போம். பூகோள முறைப்படி இவ்விடைகள் சரியே.

ஆனால் உண்மை என்ன? எங்கும் பரந்து கிடக்கிறது நீர்; அதைக் கடல் என்போம் நாம்; அதுதான் முதல் அல்லது மூலம்; சூரியன் காய்கிறது; கடல் நீர் ஆவியாக எழும்புகிறது; மேகமாகப் பரவுகிறது; மழையாகப் பொழிகிறது; கால்களாக பாய்கிறது. அருவியாகக் குதிக்கிறது. ஆறாக ஓடுகிறது. இறுதியில் தான் எங்கிருந்து வந்ததோ அங்கு, அந்தக் கடலுக்கே சென்று கலந்து ஒன்றிவிடுகிறது. இடையில் பெற்ற காவிரி கங்கைபோன்ற பெயர்களும் மறைந்து விடுகின்றன.

இந்த உண்மையைக் கவிச்சக்கரவர்த்தி கம்பனாட்டாழ்வார், இராமாயணத்தில் ஆற்றுப்படலத்தை முதலாவதாக ஆக்கிய பெருமகன், அப்படலத்தில் நீரை வைத்துக் கொண்டே, கடவுள் தத்துவத்தை அருமையாக, அழகாக உணர்த்திவிடுகிறார்.

கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லை இல் மறைகளாலும்
இயம்ப அரும்பொருள் ஈது என்ன,
தொல்லையில் ஒன்றே ஆகி
துறைதொறும், பரந்த சூழ்ச்சி
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும் போல், பரந்தது அன்றே!

"கல்லிடை, அதாவது மலையிடத்தே தோன்றி நீளச்சென்று கடலிடத்தே ஒன்றிவிட்ட நீராறு இருக்கிறதே அது வரம்பில்லாத வேதங்களாலும் சொல்ல முடியாத பரம்பொருள்தான் இஃது என்னும்படி ஆதியில் ஒன்றே ஆகி எல்லா இடங்களிலும் விரவிச் சூழ்ந்துள்ள நிலையைப் பார்த்தால் பல பெரிய மதங்களும் கூறும் பரம்பொருளைப்போல அல்லவா பரந்து கிடக்கிறது" என்று எவ்வளவு எளிதாக அரிய தத்துவப்பொருளையே கூறிவிடுகிறான் கவி.

திருமதி. கே. கமலா மாரியப்பன் - கோவை

சிறுத்தாம்பு" என்று தொடங்கும் நம்மாழ்வாரைப் பற்றிய அந்தாதி தொடையாலான பதினொன்று கலி விருத்தப்பாக்களாலானது. அப்பாடல்கள் குரு மகிமை கூறும் மதுரமான பாடல்கள். ஒரு சத்குருவைச் சேர்தல் நம் ஆன்மாவிற்கு மதுரம். அவர் திருப்பணியில் ஈடுபடல் நம் உடலுக்கு மதுரம். அவர் திருப்புகழ் பேசலும், பாடலும் அறிவிற்கு மதுரம். குருவும், சீடரும் ஐக்கிய உணர்வடைதல் உலகிற்கு மதுரம். இத்தனை மதுரங்களும் நம்முடைய ஆழ்வாரிடம் ஒரு சேர இருந்ததாலேயே "மதுரகவியாழ்வார்" என்றழைக்கப்பட்டார். பிரபந்தத்தின் முதற்பாடலில் மதுரகவியாழ்வாருக்குக் கண்ணனாகவே நம்மாழ்வார் காட்சி நல்கிய தன்மையை நாம் காண்கிறோம். கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் கண்ணன். சிறுபிள்ளையாய் அவன் செய்த சிறு குறும்புகளுக்குப் பொறுக்காத யசோதையானவள் ஒரு சிறிய கயிற்றினால் அவனைக் கட்டிப்போட நினைக்கிறாள். உலகையளந்த உத்தமனான அவனைக் கட்டிவிட முடியுமா, என்ன? ஆனால் தாய்க்கு அடங்கிய தனயனாக காட்சி தர விரும்பிய அக்கள்வன் அச்சிறிய கயிற்றினால் கட்டப்பட்ட சிறியவனாகவும் தன்னை ஆக்கிக்கொண்டான். அவ்வாறே தான், அடியார்களின் பக்தியைக் குள்ளும் அவன் எளியவனாக ஆட்பட்டுப் போகிறான். நம்மாழ்வாரும் நம்மால் புரிந்துகொள்ள இயலாத உயர்ந்த நிலையை அடைந்தவர். ஆனால் எளியவர்களாகிய நாமெல்லாம் உய்யும்பொருட்டு நமக்கருள் செய்யும் குருவாக வாய்த்திருக்கின்றார். கண்ணனும் நம்மாழ்வாரும் வேறு வேறல்லர். கண்ணனே நம்மாழ்வாராக மதுரகவியாழ்வாரின் கண்களுக்குக் காட்சி தருவதால், 'தென் குருகூர் நம்பி' என்று சொல்லிற போதே அவருடைய நாவில் அமுதம் ஊறுகிறதாம்.

இரண்டாவது பாடலில்,

"தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
பாவி னின்னிசை பாடித்தி ரிவனே"

என்கிறார். மதுரகவியாழ்வாருக்கு நம்மாழ்வாரே தெய்வம். ஒருவேளை 'கண்ணன் வேறு, நம்மாழ்வார் வேறு' என்று நிரூபிக்கப்பட்டாலும் கூட அவர் நம்மாழ்வாரைத் தான் தெய்வமாக வணங்குவாரேயன்றி கண்ணனைக் கண்ணெடுத்தும் பாரராராம். என்னே அவருடைய குருபக்தி!

மூன்றாம் பாடலில் நல்லவேளையாக 'கண்ணனும், நம்மாழ்வாரும் ஒருவரே' என்பது போல 'தேவபிரானுடைய கரிய கோலத் திருவுருவைக்' காண்கிறார். கரிய கோலத் திருவுரு கண்ணனுக்கும் நம்மாழ்வாருக்கும் பொதுவாக இலங்குவதாகும்.

நான்காம் திருப்பாடலில் தமக்கு நம்மாழ்வாரே தாயும், தந்தையுமான தன்மையைக் கூறுகிறார் ஆழ்வார். அவரோ பிராம்மணர். நம்மாழ்வாரோ வேளாளர் மரபில் வந்தவர். 'பிராம்மணர் வேளாளருக்கு ஆட்படுவதோ?' என்று பிறர் தம்மைப் புன்மையாகக் கருதினாலும் கவலையில்லை. தாயும், தந்தையுமானவரிடத்தில் சாதி வேற்றுமை எழ இடமில்லை என்கிறார் மதுரகவியாழ்வார்.

ஐந்தாம் பாடல், நம்மாழ்வாரைக் காண்பதற்கு முன்னிருந்த மதுரகவியாழ்வாரின் தன்மையையும், அதற்குப்பின் அவரிடம் ஏற்பட்ட நல்ல மாற்றத்தையும் விவரிக்கிறது. முன்னாளில் பொன்னும், பொருளும் போகம் தரும் பெண்ணும் நம் ஆழ்வாருக்குப் பெரிதாகப்பட்டனவாம். குருநாதரைக் கண்ட பிறகோ அவருக்கே அன்புத்திறம் பூண்ட அடியாராய் மாறி உய்ந்ததாகக் கூறுகிறார். அவ்விதம் ஆட்கொண்ட திருக்குருகூர் நம்பி இனி வரும் எழு பிறப்பும் தம்மைக் கைவிடாது அருள் பாலிப்பார் என்கிறார் ஆழ்வார். அடுத்தப் பாடலில் அத்தகைய ஆற்றல் அவருக் குண்டோவெனில் மதுரகவியாழ்வாரின் பண்டை வல்வினையொழித்த காரிமாறப்பிரானுக்கா அவ்வருள் பாலிக்கும் தன்மை இல்லாமல் போகும்? இவ்வுண்மையை ஏழாவது பாடல் இயம்புகிறது.

எட்டாவது பாடலில் நம்மாழ்வாரின் தெய்வத் தமிழ்த் தொண்டினை எடுத்தியம்புகிறார் மதுரகவியாழ்வார்.

"அருள் கொண் டாடும் அடியவர் இன்புற
அருளி னான்அவ் வருமறை யின்பொருள்
அருள்கொண்டு ஆயிரம் இன் தமிழ் பாடினான்
அருள்கண் டீர்இவ் வுலகினில் மிக்கதே"

என்பதே அப்பாடல். நம்மாழ்வார் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நூல்களை அருளிச் செய்துள்ளார். அவையனைத்தும், "தமிழ் வேதம்" என்று புகழப்படும் பெற்றியவை.

நால்வேத சாரமாகிய நம்மாழ்வாரின் அருளிச் செயல்கள் மதுரகவியாழ்வாரின் நெஞ்சில் நன்கு பதிந்துவிட்டன. இது அவரிடம் கொண்ட அடிமைத்திறத்தால் விளைந்த பயனாகும். இச்செய்தியை ஒன்பதாம் பாடல் நமக்குத் தெரிவிக்கிறது.

கடைசி இரு பாடல்களும் நம்மாழ்வாரின் அருட்குணத்தையும், அவரையடைந்தார் அடையலாகும் பேற்றையும் கூறுகின்றன. நம்மாழ்வார் தமக்கு ஒரு பயனும் விளையப்போவதில்லை என்று தெரிந்திருந்தாலும், தம்மையடைந்தவர் ஒரு தகுதியும் உடையவரல்லர் என்பதை அறிந்திருந்தாலும் அனைவரையும் ஆட்கொண்டு நன்னெறிக்கண் உய்ப்பவர். அவருக்கு அன்பரானார் அனைவரும் சேருமிடம் வைகுந்தமேயாகும். நம்மாழ்வாரின் அன்பனான தம்முடைய சொல்லை நம்பி நம்மாழ்வாரிடம் அன்பு வைப்பவரனைவரும் கூட வைகுந்தமே சேர்வர் என்று கூறி பிரபந்தத்தை முடிக்கின்றார் மதுரகவியாழ்வார்.

(36-ம் பக்கத் தொடர்ச்சி)

எனபது அனுஸநதிககத தக்கது பகுததறிவு எனபது நாம செய்யும ஒரு செயல நறசெயலா, தீசசெயலா எனறு தீர்மானிபபது தீசசெயல களை விலக்கி நறசெயல களையே செயய வேணடும மானிடரகள இபபிறவியிலா வது முகதி பெற வேணடுமே என்ற பரம கருணையினால பகவான் தானே அநதநத சந்தரபபஙகளுககேறப தன அம்ச பூதரகளாக ஆசாரயனை தோற றுவிதது, நமமைக கடைத தேறச் செயகிறுன் தான நேரில செயய முடியாதவை களை ஆசாரயனைக கொணடு செயவிபபதால, ஆசாரயரகள எமபெருமான் அமசஙகளாகும அவரகளே பேசும தெயவமும ஆவர ஞானத்தையும முக தியையும அடைய வேண்டுமானால, ஆசாரய பகதி யும, சரணுகதியுமதான சுலபமான வழி எனறு பூர வாசாரயரகள வகுததுளளனர எனவே தான் ஒருவர மரண மடைநதால, அவரை, "ஆசார யன திருவடிகளை அடைநதார" எனறு வைணவ ஸமபரதாயத தில கூறபபடுகிறது ஸ்ரீமத ராமாயணததிலுமகூட, மகா

தபஸவியான சபரி சககரவரததி திருமகன் முனனிலையில சரீ ரததை விடும போது, "எனனு டைய ஆசாரயன் திருவடிககுச செலகிறேன" எனறுகூறி உயிர நீத்தாள "யானஹம பரயசா ரிஷம" எனபது வாலமீகியின வாககு

**ஆசார்யர்களில் உள்ள வகைகள்:**

ஆசார்யரகளில் உபகாரக ஆசாரயர, உததாரக ஆசார்யர, ஞான ஆசாரயர, லோக ஆசாரயர, குல ஆசாரயர எனற பல வகையுண்டு இவை கள எல்லாவறறையும விளககி னால் மிகவும் விரிநது விடும எனவே விரிவுககஞ்சி இரண டொனறுககு மட்டும விளககம தரபபடுகிறது

**உபகார ஆசார்யர்:**

ஒரு மநதிரத்தை உபதேசம செயதவர உபகாரக ஆசார்யர் எனபபடுவர அநத மநதிரத்தின் உடபொருடகளைத தெளிவு படுததி உபதேசிபபார மற்றவர இவர் உததாரக ஆசாரயர எனபபடுவர இவவி ருவரகளிடததிலும் ஒரே மாதிரியான பகதி, விஸவாசம் காடட வேணும ஒருவர உபகாரராகவும், உததாரகராகவும் ஏற்படுவதுணடு உதாரண மாக இராமனுஜருக்கு பெரிய நமபிகள உபகார ஆசாரயரா வர திருக்கோடடியூர நமபி களோ உததாரக ஆசாரயரா னார ஆனால ஸ்ரீபடடரோ வெனில், நஞ்ஜீயருககு, உபகார ராகவும உததாரகராகவும் இருந்தார் ஒரு பாழ நிலததை நனறுக பயன்படுததியவனைப் போல உபகாரகாசார்யார பண்படுத்தப்பட்ட நிலத்தில பயிர் வைதது பலன் எடுத்தவர உத்தாரகாசார்யாராவர் இராமானுஜர வைணவகுல ஆசாரயராக வும், கருபாமாதரபிரசன்னாசார் யராகவும் இருநதார் விரிவுககு அஞ்சி மறறவை விடப்படுகிறது

**ஆசார்யனின் முக்யத்வம்:**

ஸ்ரீவைஷ்ணவர்கள் எநத சுப காரியஙகள் நடைபெறறுலும் அதைத தெரியப்படுத்த இருக்கும ஸ்ரீமுகங்களில் (தபால்களில்) எல்லாம், பகவத் கிருபையை முனனிடடும, ஆசார்ய அனுக்கிரகத்தினாலும எனற வாசகஙகள காணப்படுவதை அவஸயம பாரக்கலாம இதிலிருந்து ஆசாரயனின் முக்யத்துவம விளஙகும தவிர இந்த அகிலம முழுவதும் இறைவனுடையதாகும இறைவன மந்திரததுள அடக்கம் அம்மந்திரம ஆசார்யன் வசம உளளது. எனவே, மந்திரமும், மந்திரப் பொருளான எமபெருமானும், மந்திர மீந்த குருவும் மிக முக்யமாகும இங்கு முமுக்ஷுப்படியில், திருமநதிரப்ரகரணத்தில, பரம காருணிகரான ஸ்ரீபிள்ளைலோகாசாரயார் அருளிச் செய்துள்ள சூததிரம நான்காவதை கவனிக்கவேணும் சூத்திரமாவது. "மநதிரததிலும், மந்திரத்துள்ளீடான வஸ்துவிலும், மந்த்ரப்ரதானான ஆசார்யன் பக்கலிலும பரேமம் கனக்க உண்டானால காரயகரமாவது"

**ஆசார்ய லக்ஷணம்:**

ஆசாரயன நல்ல ஸத்ஸம்ப்ரதாயத்தில் தோன்றியவரும். பிராட்டியுடன் கூடிய பெருமாளையே, பரதவமாக நிலையாக நினைத்து இருப்பவரும், ஞானமுள்ள வரும், ஞானத்தை அனுஷ்டானமாக அனுஷ்டிதது வரும ஸத்வகுணம படைத்த வராகவும், காமம், கரோதம், அஸூயை முதலிய குணங்களை விட்டவராகவும், இந்திரியங்களை அடக்கியவராகவும், சீடரகளிடக்கில பிரியமுளள வராகவும், தயை உடையவராகவும், சீடர்களுக்கு விஷ

யங்களை மனதில் பதியுமாறு, தனது வாக் சாமார்த்தியத்தினால் சொல்லிக் கொடுப்பவராகவும், சீடர்கள் தவறு செய்யும் போது தடுத்துத் திருத்தி ஆட்கொள்பவராகவும் இருப்பதே ஆசார்யராக இருக்கத் தகுதியுடையவர். இங்கு ஸ்வாமி தேசிகன் ஆசார்யலக்ஷணங்களைக் குறித்து ந்யாஸவிம்சதியில் அருளிச் செய்துள்ள ஒரு ஸ்லோகம் நினைவில் கொள்ள வேண்டிதாகிறது. ஸ்லோகமாவது

"ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே
ஸ்த்திரதியமநகம்
ஸ்ரோத்ரியம் ப்ரும்ம நிஷ்டம்;
ஸத்த்வஸ்த்தம், ஸத்யவாசம், ஸமய
நியதயாஸாது விருத்யாஸமேதம்
டம்பாஸூயாதிமுக்தம் ஜிதவிஷயி
கணம் தீர்க்க பந்தும் தயாளும்
ஸ்க்காலித்யே சாஸிதாரம் ஸ்வ பரஹித
பரம் தேசிகம் பூஷ்ணு ரீப்ஸேத் !!

**ஆசார்யனின் பெருமை:**

ஆசார்ய ஸம்பந்தமின்றி எந்த ஜீவனும் உஜ்ஜீவிக்க முடியாது என்பதுதான் வைணவத்தின் தலையாய கொள்கையாகும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீமுகங்கள், தபால் எழுதும் போது கூட முதலில் தெய்வங்களின் பெயர்களைக் குறித்து வந்தனம் செய்யாமல், தன் ஆசார்ய வந்தனமாக ஸ்ரீமதே ராமானுஜாயநம என்றோ, ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம என்றோ எழுதி விட்டுத்தான் தொடங்குவதை இன்றும் காணலாம். ஆசார்ய ஸம்பந்தம் பெற்ற பிறகே மிகப் பாபியான க்ஷத்ரபந்துவும், மகா புண்ணியசாலியான புண்டரீகன் என்ற அந்தணனும் நற்கதியை அடைந்தனர் என்று இதிஹாசம் கூறுகிறது. ஆசார்ய தேவோபவ என்கிறது வேதம். எழுத்தறிவித்தவன் இறைவன் என்கிறார் மூதாட்டியார். ஆசார்யனை தெய்வத்தைப் போல் பூஜிக்க வேணும். யாருக்கு பகவானிடத்திலும் ஆசார்யனிடத்திலும் மிக உயர்ந்த பக்தியும் விசுவாசமும் இருக்கிறதோ, அவர்களுக்கு ஆசார்யன் உபதேசித்த ரகஸ்ய க்ரந்தார்த்தங்கள் தெளிவாய் விளங்கும் என்பர். ஆசார்ய பக்தியின் காரணமாய் ஆசார்யன் உபதேசிக்காத பல பாகங்களும், உட்பொருளும் தெளிவாய் தெரிந்து விடும். உதாரணமாக மகாபாரதத்தில் ஆதி பர்வத்தில் மகரிஷி தௌம்யருடைய மூன்று சீடர்களான, உபமன்யு, பைலர், ஆருணி ஆகியவர்களின் சரித்திரம் மூலமாகவும், மற்றும் ஏகலைவன் சரித்திர வாயிலாகவும் குருவின் பெருமையை நன்கு உணரலாம். வைணவத்தில் ஸ்ரீ ராமானுஜரின் சீடரான வடுகநம்பிகள், தன் ஆசார்யரைத் தவிர வேறொன்றும் அறியாதவர். குரு இல்லாத வித்தை குருட்டு வித்தை என்றும், தொட்டுக்காட்டாத வித்தை, சுட்டுப்போட்டாலும் வராது என்பது முதுமொழியாகும். யாராக இருந்தாலும் வித்தைகளை ஆசார்யன் மூலமாகத்தான் கற்க வேணும் என்பது நியதி. இந்த நியதியின் படியே சக்கரவர்த்தி திருமகனும், பகவான் கிருஷ்ணனும், வித்தைகளை முறையே வசிஷ்டர், விஸ்வாமித்திரர், சாந்தீபினி என்ற மகரிஷிகளிடம் கற்றூர்கள் என்கின்றன இதிஹாசங்கள். ஸ்ரீமத்ராமானுஜரும் பெரிய நம்பிகள், திருக்கோட்டியூர் நம்பிகள், திருவரங்கப்பெருமாள் அரையர்,திருமலை நம்பிகள், திருமலையாண்டான் ஆகிய ஐந்து ஆசாரியரிடத்திலும் சீடராக இருந்து பஞ்சாசார்ய பதாச்சார்யர் என்ற பெயரையும் அடைந்தார்.

**ஆசார்யன் அருள் பாலித்தல்:**

இதை ஆசார்ய கடாக்ஷம் குரு அருள், குரு தீக்ஷை என்று பல வகையாகக் கூறலாம். ஆசார்யன் தன் சீடர்களின் தாரதம்யத்திற்கேற்ப, பல முறைகளில் அருள் பாலிப்பதுண்டு நயன தீக்ஷை ஸ்பர்ஸ தீக்ஷை, வாக் தீக்ஷை, அனுக்ரஹ தீக்ஷை என்று பல வகையுண்டு இவற்றில் இரண்டொன்றை மட்டும் விளக்குவோம்

நயன தீக்ஷை ஸ்ரீஆளவந்தார் இராமானுஜரை நேரே பார்த்ததில்லை. ஒரு சமயம் ஆளவந்தார் காஞ்சிக்கு சென்றிருந்த போது, ராமானுஜர் தன் ஆசார்யரான யாதவப்ரகாசருடன், கூட்டமாக வந்து கொண்டிருந்தார். அது சமயம் ஆளவந்தாரின் சீடர்கள் நெடிய உருவாய், ஆஜானுபாஹுவாய் இருப்பவர் தாம் ராமானுஜர் என்று காட்டினர். அப்போதே ஆளவந்தார் ராமானுஜரை கண்குளிரக் கடாக்ஷித்து இவரே நம் தரிசனத்திற்கு ஏற்றவராவர் உரிய காலத்தில் வருவார் என்றும் சொன்னார். இதுவே ராமானுஜருக்கு ஆளவந்தாரின் நயன தீக்ஷையாகும்.

ஸ்பர்ஸ தீக்ஷை. ஒருவருக்கு குருவின் சரீரத்தின் ஓர் அங்கம் பட்டமாத்திரத்திலேயே

ஞானம் ஏற்படுவது ஸ்பர்ச தீக்ஷையாகும். உதாரணமாக இராமானுஜர் ஓர் ஊமைக்கு தன் திருவடியை, அவர் சிரசில் வைத்து அருள் பாலித்தார். இதே போன்று ராமகிருஷ்ண பரம ஹம்சரும் தன் சீடரான விவேகானந்தரின் சிரசில் திருவடியை வைத்து ஞானத்தை கொடுத்தார். திருவண்ணுமலையில் வாழ்ந்து வந்த ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகளும் சிலருக்கு முதுகிலும், கன்னத்திலும் அறைந்து ஸ்பர்ஸ தீக்ஷையினாலேயே ஞானம் பெறச் செய்தார் என்று அவர் சரித்திரம் கூறுகிறது.

வாக் தீக்ஷை ஒருவருக்கு தன் குருவின் அருள் மொழிகளை கேட்டமாத்திரத்திலும், அல்லது குருவானவர் ஒருவரை பார்த்து அவர் வாக்கினால் அவருக்கு எல்லாம் தெரிந்து விட்டது என்றோ, அல்லது எல்லாம் வந்து விட்டது என்று சொன்னவுடன் ஞானம் பிறந்து விடும். இதுவே வாக் தீக்ஷையாகும். மகாபாரதத்தில் வரும் தௌம்யர் என்ற மஹ ரிஷியின் சீடர்கள் பைலர், உமன்யு, ஆருணி என்ற சீடர்கள் தவறி கிணற்றில் விழுந்திருந்த போது தௌம்யர் செய்த உபதேச மொழிகளைக் கேட்டு ஞானம் அடைந்து கிணற்றிலிருந்து வெளியே வந்தனர். திருமங்கை மன்னன் வழிப்பறி செய்து, பாகவத ஆராதனம் செய்து கொண்டிருந்த போது எம்பெருமான் அவரை ஆட்கொள்ள அந்தணத் தம்பதிகளாக வந்து இவர்களின் பொருள்களை அபகரித்து மூட்டையாக கட்டி, எடுக்க முயலும் போது மூட்டையை எடுக்கமுடியவில்லை. கோபம் கொண்ட திருமங்கை மன்னனும் அந்தணத் தம்பதிகளாக வந்த பெருமான் பிராட்டியாரை நோக்கி மூட்டையை எடுக்க முடியாமல் இருக்க என்ன மந்த்ரவாதம் செய்தீர் என்று கத்தியைக் காட்டி மிரட்டினான். அப்போது அந்தணனாக வந்த பெருமான் அந்த மந்த்ரத்தை உமக்குச் சொல்கிறோம் அருகில் வாரும் என்று அழைத்து அவர் காதில் திருவெட்டெழுத்தாகிற, ஓம் நமோ நாராயணய என்ற மந்த்ரத்தை பகவான் ஆசாரியனாகவும் மன்னனை சீடனாகவும் பாவித்து உபதேசித்தான். அதைக் கேட்ட மாத்திரத்திலேயே திருமங்கை மன்னனுக்கு ஞானம் பிறந்தது. இதுவும் வாக்தீக்ஷையாகும்.

அனுக்ரஹ தீக்ஷை: குருவானவர் தான் இருந்த இடத்திலிருந்தே சீடருக்கு அருள் பாலிப்பதாகும். உதாரணமாக ஸ்ரீ சங்கர பகவத் பாதாளுடைய சீடர்களில் ஒருவரான, பத்மபாதர், தன் குரு சேவையைத் தவிர வேறொன்றும் அறியாதவர். இதனால் மற்ற சீடர்கள் அவர்மீது வெறுப்புற்றிருந்தனர். ஒரு நாள் பத்மபாதர் கங்கையின் கரையில் குருவின் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்தார். அப்போது குரு, பத்மபாதா என்று கூப்பிட்டு அப்போதே அவருக்கு சகல வித்தைகளும் தெரிய வேணும் என்று அனுக்ரஹித்து விட்டார். குரு கூப்பிட்டு விட்டாரே என்று தண்ணீர் என்றும் பாராமல் நீர் மேல் நடந்து வந்து குருவை வணங்கினார். குருவும் அவரைப் பார்த்து இப்போது மற்ற சீடர்களுக்கு நடந்த பாடத்தைச் சொல் என்றவுடன், தான் இல்லாத போது மற்ற சீடர்களுக்கு சொன்ன பாடத்தை, அப்படியே பிழையின்றி பத்மபாதர் சொன்னார். இது குரு அனுக்ரஹ தீக்ஷையாகும்.

**ஆசார்யனும் பகவானும்:**

தத்வ, ஹித, புருஷார்த்தங்களில், அஞ்ஞானமாகிற இருளை இருவரும் போக்குகிறூர்கள். பாபங்களைப் போக்குவதிலும் இருவருக்கும் சாம்யம் உள்ளது. பகவானை விட ஆசார்யனே உயர்ந்தவர் என்பது தான் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தம். பகவானை நேரில் கண்டு ஆஸ்ரயிக்க முடியாது. ஆனால் ஆசார்யனை ஆஸ்ரயிப்பது சுலபம். பகவான் வேத சாஸ்த்திரங்களாலும் கூட அறிய முடியாதவன். "யதா வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" என்பது வேத வாக்கு. ஆனால் ஆசார்யனை நேரில் கண்டு ஆஸ்ரயித்து, பக்தி சரணுகதி செய்து, ஆசார்ய சிச்ருக்ஷை கைங்கர்யம் முதலியவைகளைச் செய்து ஆசார்யனை ப்ரீதி செய்ய முடியும். இதனால் ப்ரீதி அடைந்த ஆசார்யன் நமக்கு பகவானை அடைய வழி காட்டுகிறூர். தவிர ஒருவன் தான் செய்த கர்மாவுக்கேற்றபடி பகவான் பலனைக் கொடுக்கிறுன். ஆசார்யனோ, எப்படி மேகமானது எந்த ப்ரதிபலனையும் கருதாமல் மழையைப் பொழிகிறதோ, அப்படியே, எந்தப்ரதிபலனையும் எதிர் பாராமல் தன் சீடர் உயர்ந்து விளங்கவே

னும் என்று தனக்குத் தெரிந் தவைகளைக் கற்றுக் கொடுக்கி றான். இங்கு ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள அமிருதாசு வாதினி என்ற பிரபந்தத்தின் பாசுரம் 14 பார்க்கவேணும்.

"பரக்கும் புகழ்வரும் பைம்பொருள்
வாய்த்திடும் பக்தர்களா
யிரக்கின் றவர்கியை யீந்தா
லறமுள தென்றியம்பார்
கரக்குங் கருத்துரைத் தேசிகன்
கன்றென நம்மையெண்ணிச்
சுரக்கும் சுரவிகள் போற் சொரி
கின்றனர் சொல்லமுதே"

இதன் பொருளாவது ஆசார் யர்கள் ரஹஸ்யார்த்தங்களை அபாத்திரத்தில் உபதேசிக்கா மல் சேமித்து வைத்திருக்கின் றனர். மிக்க ஆசார்ய பக் தியுடன் வந்து பிரார்த்திக் கும் நம்போன்ற சீடர்களுக்கு அவ்வர்த்தங்களை பொழிகின்ற னர். இவ்வாறு அவர்கள் உபதேசிப்பது, தன் கன்றுக்கு பாலைச் சுரக்கும் காமதேனு வைப் போல், அருளால் மட்டு மின்றி, தம் புகழ் பரவுதையோ, செல்வம் சேருவதையோ, புண் யம் வருவதையோ கருதியன்று".

(உரை வங்கீபுரம் ஸ்வாமி அருளிச் செய்தது.)

ஆசார்யனும், பகவானும் பரம கருணையும், தயையும் உடையவர்கள். ஆசார்ய னும் ஆசார அனுஷ்டான முத லியவை இல்லாதவர்களுக்காக தானே பெருமாளிடம் சரணு கதி செய்து, உஜ்ஜீவிக்கச் செய் கிறான். இது மருந்து சாப் பிட முடியாதபடி நோயினால் அவதிப்படும் சிசுவுக்காக அதன் தாயானவள் தான் மருந்து சாப்பிட்டு அதன் பலனாய் சிசு வுக்கு தன் முலைப் பால் கொடுத்து சிசுவின் வியா தியை போக்குவது போலத் தான். நேரில் காணும் ஆசார் யனிடத்தில் நிலையான பக்தி, சரணுகதி, சேவையும் செய் யாது, கண்ணுக்குப் புலப்ப டாத தெய்வத்தினிடம் பக்தி செய்வது, கைப் பொருளை இழந்து, பூமிக்குள் இருக்கும் செல்வத்தைத் தோண்டி தேடு வது போலும், குடிக்கும் பாத் திரத்திலுள்ள நீரைக் கொட்டி விட்டு, மழை நீரை எதிர்பார்ப் பது போல் பரிகசிக்கத்தக்கது என்று நம் பூர்வாசார்யர்கள் கூறியுள்ளனர்.

**சீடர்களும் கடமையும்:**

"குரு ரேவ பரம்ப்ரும்மா குரு ரேவ பரா கதி: குருரேவ பரா வித்யா: குருரேவ பரம் தனம், குருரேவ பரமோ காம குருரேவ பராயணம் யஸ்மாத் ததுப தேஷ்டாசௌ, தஸ்மாத் குரு தரோ குரு:" என்பது சாஸ்த்ர வாக்யம். அதாவது ஆசார் யனே தொழத்தக்க தெய்வம் என்றும், தேடத்ததக்க நிதி என் றும், கற்கத்தக்கவித்தை என் றும், காமிக்கத்தக்க வஸ்து என்றும், விஸ்வாசிக்கத்தக்கது என்றும் சொல்லியிருக்கிறபடி யாலும், தீ மனம் கெடுத்தும், மருவித் தொழும் மனமே தந் தும், அறியாதன அறிவித்த ஆசார்யனே உபாயம், உபேயம் (அடைகிற வழியும் அடையப் படுவதும்) என்று ஆசார்யனி டம் பரிபூரண நம்பிக்கையுடன் இருக்க வேண்டும் என்பதாகும்.

"ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸா க்ஷாத் சரரூபி ந ஸம்ஸய: என்று வேதமும், 'பீதகவாடைப் பிரா னால் பிரமகுருவாகி வந்து', என்று திருவாய்மொழியும் கூறு வதினாலேயே "உறங்கும் பெரு மானே உலாவிவரும் பெரு மாளாக" (ஆசார்யனாக) வந் துள்ளார் என்று நினைவில் கொண்டு நடந்து கொள்ளவே ணும். இங்கு திருமூலரின் பாடல் ஒன்றையும் நினைவில் கொள்ளத்தக்கது. "தெளிவு குருவின் திருமேனி தீண்டல், தெளிவு குருவின் திருநாமம் செப்பல், தெளிவு குருவின் திருவார்த்தையைக் கேட்டல், தெளிவு குரு உரு சிந்தித் தால் தானே" சீடர்கள் தன் ஆசார்யனை சாதாரண மனித னாக எண்ணக்கூடாது ஆசார் யனை பகவதம்சமாக கருத வேண்டும். அதே போல் ஆசார் யரின் அமுத மொழிகளை யும் சாதாரண வார்த்தைகளாக எண்ணுமல் வேதவாக்கு போல் மதிக்க வேணும். "வேறொன் றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த மாறன் சடகோ பன்" என்று அருளிச் செய்துள் ளபடி மதுரகவியாருக்கு தன் ஆசார்யரான நம்மாழ்வாரைத் தவிர வேறொன்றும் அறியாத வர். திருக்கோட்டியூர் நம்பி களுக்கு எல்லாம் ஸ்ரீஆள் வந்தாரேயாகும். வடுக நம்பி களோ தன் ஆசார்யரான ராமா னுஜரைத் தவிர வேறொன் றும் அறியாதவர். இவர் தன் ஆசார்ய பாதுகைகளுக்கு கொடுத்த மதிப்பு, தன் ஆசா ரியரின் ஆராதன மூர்த்திக்குக் கூட கொடுக்கவில்லை. இவைக ளினால் இவர்களின் ஆசார்ய பக்தி விளங்கும். தவிர ஆசார் யன் இட்ட பணி எதுவானா லும் தயக்கமின்றி முழு மன

துடன் செய்தார்கள். உதாரணமாக இராமானுஜர் முதலியாண்டானை, சீதன வெள்ளாட்டியாக சிறிது காலம், பெரிய நம்பிகளின் புதல்வியான அத்துழாயம்மைக்கு இருக்கும்படி பணித்தார்.

"நேசனைக் காணாத இடத்திலே
நெஞ்சாரப் புகழ்தலும்,
ஆசானை எவ்விடத்தும்"

என்ற ஔவை மூதாட்டி கூறியபடி ஆசார்யனை எல்லா இடத்திலும் எந்த நேரமாயினும், புகழ்ந்து பேசவேணும். தினமும் ஒரு நாழிகைப் போதாவது ஆசார்யனின் மேலான குணங்களையும் பேச்சையும் பேசவேணும். இங்கு பரம காருணிகரான ஸ்ரீபிள்ளை லோகாசார்யர் ஸ்ரீவசன பூஷணத்தில் அருளிச் செய்துள்ள ஒரு சூர்ணிகையை நினைவில் கொள்ள வேண்டியதாகிறது.

"வஸ்த்தவ்யம் ஆசார்ய சந்நிதியும், பகவத் சந்நிதியும், வக்தவ்யம் ஆசார்ய வைபவமும், ஸ்வநிகர்ஷமும், ஜப்தவ்யம் குரு பரம்பரையும் த்வயமும், பரிக்ராஹ்யம் பூர்வாசாரியார்களுடைய வசனமும், அனுஷ்டானமும், பரித்யாஜ்யம் அவைஷ்ணவ ஸஹவாசமும், அபிமானமும், கர்த்தவ்யம் ஆசார்ய கைங்கர்யமும் பகவத் கைங்கர்யமும்"

முடிவுரை:

இந்த மண்ணுலகில் மானுட சரீரமும் எல்லோருக்கும் கிடைக்காது. அப்படிக் கிடைப்பதற்கரிய மானுடப்பிறவி கிடைத்தாலும், முக்தி பெறுவதில் இச்சை உண்டாவது அரிது. முக்தியை பெற விரும்புகிறவர்கள் நல்ல ஆசார்யனை அடைந்து, ஆசார்ய பக்தி பகவத் பக்தி, ஆசார்ய, பகவத், பாகவத கைங்கர்யங்களை செய்து, ஆசார்யன் அனுக்ரஹத்தினாலேயே முக்தி பெற முடியும் என்பதுதான் நம் பூர்வாசார்யர்கள் காட்டிக் கொடுத்த வழியாகும். கடும் வெய்யிலால் துணியை சுட்டெரிக்க முடியாது. ஆனால் சூரிய காந்தக் கண்ணாடி மூலம் வரும் அதே சூரிய ஒளி துணிகளை எரிக்கும் ஆற்றல் பெற்று விடுகிறது. பகவான் சூரிய ஒளியாகும்.

எனவே நாமும் சதாசார்யனை அடைந்து, அவரிடம் பக்தி, ப்ரபக்தி, கைங்கர்யம் செய்து உஜ்ஜீவிப்போமாக. இங்கு ஆசார்யரையும், ஆசார்ய சீடர் பக்தியை பற்றியும் ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் அருளிச்செய்துள்ள பாசுரங்கள் "ஞான அனுட்டானமிவை (61) ஆசாரியன் சிச்சனாருயிரை (65) மூலமாகவும், ஸ்வாமி தேசிகன் அதிகார சங்கிரகத்தில் அருளிச் செய்துள்ள பாசுரம், "ஏற்றிமனத்தொழின்" (38) அமிருதாசுவாதினியில் பாசுரம், பரக்கும் புகழ்வரும்"(14) ஆகிய பாசுரங்களை அனுஸந்தானம் செய்து கொண்டு, ஆசார்யனை புகழ்ந்து பேசி, அவர் திருவடிகளைத் தியானித்து உஜ்ஜீவிப்போம்.

ஆழ்வார், ஆசார்ய, எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



## சந்தாதாரர்களுக்கு...

31-7-91 ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும் போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும், புகார்களுக்கும், விவரங்களுக்கும் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

78, 206, 207, 208, 211, 311, 341, 342, 346, 352, 353, 362, 544, 558, 722, 743, 745, 2889, 3064, 3098, 3146, 3168, 3170, 3187, 3191, 3194, 3213, 4278, 4283, 4342, 4357, 4415, 4436, 4444, 5184, 5267, 5415, 5580, 5582, 5596, 5679 5684, 5710 5711, 5713, 7297, 7508, 7566 முதல் 7589, 7591 முதல் 7599, 7601 முதல் 7622, 7624 முதல் 7640, 7642 முதல் 7650, 7652, 7653, 7655, 7656 முதல் 7665, 7667 முதல் 7699, 7701 முதல் 7719, 7724 முதல் 7731, 7734 முதல் 7742, 7744 முதல் 7761, 7763, 7764, 7765, 7767, 8550

# செய்திச் சுருக்கம்

### பேருந்து நிலையம்

திருப்பதியிலுள்ள ,திருமலை அடிவாரமான 'அலிபிரி' எனும் இடத்தில் தி.தி. தேவஸ்தான தங்கு முகாம் வளாகத்தினுள் ஆந்திர மாநில பேருந்து போக்குவரத்துத் துறையின் ஒரு பகுதியாக 'சிறு பேருந்து நிலையம்' ஒன்றினை 5-5-91 அன்று தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத் அவர்கள் திறந்து வைத்தார். இங்கிருந்து தற்போது திருமலைக்கு 25 அரசு பேருந்துகள் நாளும் சென்றுவரும். இப்பேருந்து நிலையம் விரைவில் மேலும் விரிவுபடுத்தப்படும் என்று போக்குவரத்துத் துறையின் வட்டார மேலாளர் திரு. ரங்கநாயகுலு அவர்கள் தெரிவித்தார்.

* * *

### கோடைப்பள்ளி

தி.தி தேவஸ்தானத்தின் கீழ் செயற்பட்டு வரும் தர்ம பிரசார பரிஷத்' எனும் அமைப்பின் ஆதரவில் திருப்பதி ஸ்ரீஅன்னமாச்சார்ய கலாமந்திரத்தில் 'கோடைப்பள்ளி' எனும் சமயப் பயிற்சி முகாம் ஒன்று 6-5-91 முதல் 10 நாட்களுக்கு நடைபெற்றது. இப்பயிற்சிப் பள்ளியினை தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத் அவர்கள் துவக்கி வைக்க, இத்துவக்க விழாவில் சித்தூர் மாவட்ட முதல்வர் திரு. ஐவி. சுப்பாராவ் அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார்.

* * *

### ஜெயந்தி விழா

ஸ்ரீதாள்ளப்பாக்கம் அன்னமாசார்யாவின் 583-வது ஜெயந்தி விழா திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் 28-5-91 முதல் மூன்று நாட்களுக்கு வெகு சிறப்பாக் நடைபெற்றது. 28-5-91 அன்று நடைபெற்ற துவக்க விழாவிற்கு தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் தலைமை வகிக்க, ஆந்திர அரசு செயலர் திரு. கே. வெங்கட சிவய்யா அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார். அதற்கு முன்பு, அன்னமாச்சார்யா விளம்பரத்துறையின் ஒத்திசைவாளர் டாக்டர் எம். மோகன் அவர்கள் கூட்டத்தினரை வரவேற்றார். இம்மூன்று நாட்களின் போது தென்னகத்தைச் சார்ந்த புகழ்பெற்ற இசைக்கலைஞர்களின் கர்நாடக இசைக் கச்சேரிகளும், அன்னமாசார்யா திட்டத்துறையைச் சார்ந்த கலைஞர்களின் இசை நிகழ்ச்சிகளும், நாட்டிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

* * *

திருப்பதியிலிருந்து சுமார் 7 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஸ்ரீநிவாசமங்காபுரத்திலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் வருடாந்திர உத்ஸவமான 'ஸாக்ஷாத்கார வைபவம்' 15-7-91 முதல் 17-7-91 வரை மூன்று நாட்களுக்கு மிகச்சிறப்பாக நடைபெற உள்ளது.

* * *

### இருப்பூர்திகள்

தற்போது திருமலைக்குப் பேருந்துகள் செல்லும் மலை வழிச் சாலைகளில் பேருந்துகளுக்குப் பதிலாக மின்சாரத்தால் இயங்கும்படியான இருப்பூர்திகளை Tramway பயன்படுத்துதல் பற்றி மேலாண்மை தீவீரமாக சிந்தித்து வருகின்றது. இப்போக்குவரத்தினால் சாலை விபத்துக்களை பெருமளவில் தவிர்க்க முடியும் என்று நம்பப்படுகிறது. இத்திட்டத்திற்குப் பொதுமக்களின் ஆதரவும் பெருமளவில் இருப்பதாகத் தெரிகிறது

* * *

### மற்றையச் செய்திகள்...

நாடு முழுவதும் தற்போது தற்காலிகமாக ஆரம்ப நிலையில் கட்டி நிறுத்தி வைக்கப் பட்டிருக்கும் 82 தி.தி. தேவஸ்தான திருமண மண்டபங்கள், ஆந்திர அரசின் அனுமதி அண்மையில் கிடைத்ததின் பேரில் விரைவில் கட்டிமுடிக்கப்படும்.

* * *

கிய நபர்கள் மட்டுமே, திரு மலைக் கோயில் தரிசனத்திற்காக, கோயில் முகத்துவாரம் வழியாக (கோபுரம் வழியாக) நேரடியாக அனுமதிக்கப்பட்டு வந்தனர். தற்போது, ஆந்திர அரசு கேட்டுக்கொண்டதின் பேரில் அதன் ஆலோசனைப்படி இந்திய நாட்டு ஜனாதிபதி, உதவி ஜனாதிபதி, பிரதம மந்திரி, உதவிப் பிரதம மந்திரி, உச்ச உயர்நீதிமன்ற நீதிபதி, பாராளுமன்றத் தலைவர், மத்திய அமைச்சர்கள், திட்டக்குழுவின் துணைத்தலைவர், மாநில முதல்வர்கள், மற்றும் ஆளுநர்கள், முன்னாள் ஜனாதிமந்திரி ஆகியோரும் மேற்படி வழியாக தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர்.

* * *

பதவி ஓய்வு பெறும் ஒவ்வொரு தி.தி. தேவஸ்தான ஊழியர்க்கும் மேலாண்மையின் சார்பில் 5 கிராம் எடையுள்ள 'தங்கப்பதக்கம்' வழங்கப்படும்.

* * *

தி.தி. தேவஸ்தான ஊழியர்கள் மற்றும் நகர தொழிலாளர்கள் சம்பந்தமாக பொதுத் தொண்டு ஆற்றிவரும் தி.தி.தேவஸ்தான கீழ்நிலை உதவியாளர்களைப் பாராட்டும் வகையில் அவருக்கு "ஸ்ரம சக்தி" எனும் விருதினை ஆந்திர அரசு சார்பில், முதல்வர் திரு. என். ஜனார்த்தன ரெட்டி அவர்கள் 1-5-91 அன்று ஹைதராபாத்தில் வழங்கினார்.

* * *



(3 -ம் பக்கத் தொடர்ச்சி)

வும் என்பது மனிதனுக்கு கிடைத்திட்ட ஓர் உரிமைப்பெருகும். ஒருவனுடைய சிந்தனையும், பேச்சும், செயலும் தவருக இருந்தால், அவற்றை அவன் திருத்திக்கொள்ள ஒரே வழி, குறை காணுபவர்களின் பேச்சும், சிந்தனையும், செயலும் மேம்பட்டதாக இருத்தல் வேண்டும். ஒருவனுடைய வளர்ச்சியினை தன்னுடைய வளர்ச்சிக்கு ஒரு பாதையாகக் கருத வேண்டும். ஒருவனுடைய வளர்ச்சியை மற்றவர் தடுப்பதாலோ, அழிப்பதாலோ கிடைக்கக்கூடிய இறுதிப்பயன் என்ன என்பதை சிந்திக்க வேண்டும். அறிவோடு அறிவு மோதிடும் போது இடையில் ஆயுதங்கள் ஏன்? நெருப்போடு நெருப்பு மோதினால் இறுதியில் காண்பது ஒளியல்ல, வெறும் சாம்பல்தான். தனக்குப் பிடிக்காதவர்களை அழிப்பதுதான் ஒரே தீர்வு என்ருல், தன்னைப் பிடிக்காதவர்கள் பலர் தன் பின்னால் உள்ளனர் என்பதையும் அறியவேண்டும். பகையை பகையால் அழிக்க முடியாது. மனித உயிர் அழிக்கப் பிறந்தது அல்ல, ஆக்கப்பிறந்தது; அறிவுப்பூர்வமான சிந்தனையை பெறப்பெற்றது; மனித நேயத்தின் மேன்மையை அறிவுறுத்தப் பிறந்தது.

உயிர்களைப் பாதுகாத்துக் கொள்ளும் பொறுப்பு அந்தந்த உயிர்களையே சாரும் என்று கருதினால் மனிதர்க்கும், மிருகத்திற்கும் வேற்றுமை காணமுடியாது. 'வாழு, வாழவிடு' எனும் பெருங்கொள்கையினை அடிப்படை மூச்சாகக் கொண்டு விளங்குவது மனித இனம். இறைவனால் படைக்கப்பட்ட ஒரு உயிர், அவ்வாறு படைக்கப்பட்ட மற்ரெரு உயிரால் பறிக்கப்படுவது என்பது மனித நாகரீகத்திற்கு மாபெரும் மாசாகும். ஆகவே தங்கள் உயிரை காப்பாற்றிக் கொள்வதோடு மட்டுமின்றி, பிற மனித உயிர்களுக்கும் மதிப்பளித்துப் போற்றுவதும், அவ்வுயிர்களுக்கு ஆபத்து நேரிடும் போது அவற்றைக் காப்பாற்றுவதும் மனிதகுலத்திற்கு பெருமை சேர்க்கும். மேலும், ஆபத்து ஏற்படுத்தும் உயிர்களைப் பாதுகாப்பதும், ஊக்குவிப்பதும் வன்முறை வழிக்கு வழிகோலவும், அவ்வழியில் அடுத்த தலைமுறையினரை இட்டுச் செல்லவும் வழிவகுக்கும் என்பதை நாம் உணர்ந்தால் அதுவே இம்மண்ணிற்காக இன்னுயிர் ஈந்த உயிர்களுக்கு நாம் செலுத்திடும் 'நன்றி அஞ்சலி'களாக அமைந்திடும்.

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு இடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தலைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-

கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :
அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)
பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103.

Edited and Published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507.

